# கொலம்பியா ரிகார்டுகளில்



## தி சுகன்யா

டாக்கி பாட்டுகள்

R. மகாலிங்கம் பாடிய

.6086 { தேவகி தனயா....
அன்றொரு மாதுடன்

.6087 { நாராயணா........
உதார குணனும்.

## தவகன்யா

டாக்கி பாட்டுகள்

R. ஜீவரத்னம் & பார்ட்டி

6083 { ஸ்ரீதரன் அருள்...
ஆஹா இதே...

R. ராமச்சந்திரன் & பார்ட்டி

6085 { நலங்கிட........
வேரிலே வெடித்த .

## அனந்தசயனம்

டாக்கி பாட்டுகள்

.சுப்புலக்ஷ்மி, பட்டு அய்யர் & பார்ட்டி

6019 { மொரந்தை........
நீ வாடி என்......

## ரஸ்வதி ஸ்டோர்ஸ், மதராஸ்.

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடம் கிடைக்கும்:

கண்ணன் & கம்பெனி, திருச்சிராப்பள்ளி.

# கல்கி பொருளடக்கம்

மலர் 2 இதழ் 26 | 1943 ஏப்ரல் 10 | சித்திரபானு ௵ பங்குனீ௴ 28௳



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனைச் சம்பவங்கள்.




தமிழ் டாக்கிகளைப் பற்றி எத்தனையோ அபிப்பிராய பேதங்கள் இருக்கலாம். ஆனால், முதன் முதலாகத் தமிழில் வந்த நல்ல டாக்கி எது என்று கேட்டால் ஒரு முகமாக "பக்த குசேலா" என்ற பதில்தான் வரும். "பக்த குசேலா" படத்தின் இந்த மகத்தான வெற்றிக்கு முக்கிய காரணமாயிருந்தவர் அந்தப் படத்தில் கிருஷ்ணன் வேஷத்தில் தோன்றித் தமது நடிப்புத்திறனாலும் நகை முகத்தினாலும் தமிழ்நாட்டின் உள்ளத்தைக் கவர்ந்த ஸ்ரீமதி எஸ். டி. சுப்புலக்ஷ்மி. இவர் பல வருஷங்களுக்குப் பிறகு இப்போது மறுபடியும் "கிருஷ்ண சுதாமா" என்னும் கன்னடப் படத்தில் கிருஷ்ணன் வேஷத்தில் தோன்றுகிறார். இன்னும் நடன மேடையிலும் அதே வேஷத்தில் தோன்றி 'நடன கலா சேவை' செய்கிறார். டைரக்டர் கே. சுப்பிரமணியம் ஆரம்பித்திருக்கும் இந்த நவீன நடன கலா சேவையில் எஸ். டி. எஸ். 'வள்ளி'யாகத் தோன்றி நடனமிடும் தோற்றம் இந்த இதழின் அட்டைப் படத்தை அலங்கரிக்கிறது.




# கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்


# என்ன சேதி?

## தொலை தூரக் குரல் ●

"இந்திய சர்க்காரே! எங்களைக் காப்பாற்றுங்கள்! எங்களைக் காப்பாற்றுங்கள்" என்று தொலை தூரத்திலிருந்து தீனக் குரல் கேட்கிறது. "ஐயோ! நம் சர்க்காரை யாரோ என்னமோ கேட்கிறார்களே! அதுவும் காப்பாற்றச் சொல்லிக் கேட்கிறார்களே! இது என்ன அநியாயம்!" என்று நாம் திகில் அடைகிறோம்.

ஆனால் இந்திய சர்க்கார் அப்படியெல்லாம் திகில் அடைந்து விடுவதில்லை. ஏனென்றால், வருஷத்திற்கொரு தடவை இந்த மாதிரி வெளி நாட்டிலிருந்து கூக்குரல் வந்தால் அது தென்னாப்பிரிக்க இந்தியர்களுடையதாகத்தான் இருக்க வேண்டும் என்பது அவர்களுக்குத் தெரியும். அதைக் கேட்டுவிட்டு மேலே என்ன செய்ய வேண்டும் என்பதும் அவர்களுக்கு நன்றாய்த் தெரியும். 'சீனாவில் வெள்ளம்' 'வட துருவத்தில் வால் நட்சத்திரம் தோன்றுகிறது' என்ற செய்திகளைக் கேட்டால் நமது சர்க்கார் என்ன செய்வார்களோ, அதையேதான் மேற்படி கூக்குரல் விஷயத்திலும், 'டக்'கென்று செய்து முடிப்பார்கள்.

நமது சர்க்காரின் இப்படிப்பட்ட சிரத்தையைப் பார்த்து விட்டுத்தான் தென்னாப்பிரிக்க இந்தியர்கள் முன்னொரு தடவை தங்கள் குறைகளை விளக்கிக் கூறுவதற்காக ஒரு தூதுக் கோஷ்டியை அனுப்பினார்கள். அவர்களுடைய தொந்தரவு பொறுக்க முடியாமல் இந்திய சர்க்கார் தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டு தென்னாப்பிரிக்காவில் ஒரு ஹை கமிஷனரை நியமித்து, "கவலைப் படாதீர்கள்! அவர் எல்லாவற்றையும் பார்த்துக் கொள்வார்" என்று சொன்னார்கள்.

அவர் அப்படியே "பார்த்துக் கொண்டிருந்தார்" என்று தெரிகிறது. ஏனென்றால் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருப்பதைத் தவிர அவரால் வேறொன்றும் செய்ய முடியவில்லை.

## "எழுப்ப மாட்டீர்களா?" ●

இப்பொழுது தென்னாப்பிரிக்கச் சட்டசபையில் ஐரோப்பியர்கள் ஒரு மசோதா கொண்டு வரப் போகிறார்களாம். அதன்படி அவர்கள் வசிக்கும் ஒரு குறிப்பிட்ட பிரதேசத்துக்குள் இந்தியர்களுக்கு நிலம் வாங்க அனுமதியளிக்கப்பட மாட்டாது. இதிலிருந்து தென்னாப்பிரிக்கா வெள்ளையரின் நிறத் திமிரை மட்டுமின்றி, அவர்கள் இந்தியர் சௌக்கியமாக வாழக் கூடாது என்ற கெட்ட எண்ணமுடையவர்களென்றும், போதாத இடத்தில் இந்தியர்களை அடைத்து ஒதுக்கி வைக்க முயலுகிறார்களென்றும் அறிகிறோம். இதே ஐரோப்பியர்கள்தான் ஹிட்லர் யூதர்களை 'கெட்டோ'க்களுக்குள் ஒதுக்கி வைப்பதைக் கண்டிக்க வந்து விடுகிறார்கள்.

மேற்படி அநியாய நிவர்த்திக்காகத் தென்னாப்பிரிக்கா இந்தியர்கள் இந்திய சர்க்காரின் உதவியை எதிர்பார்க்கிறார்கள். "ஐயா! தென்னாப்பிரிக்க சர்க்காரிடம் சொல்லி உங்களால் இந்த மசோதாவை நிறுத்த முடியுமானால் நிறுத்துங்கள்! இல்லாவிட்டால், ஹை கமிஷனர் என்று என்னத்திற்காக ஒருவரை ஜம்பமாக வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? அவரைத் திருப்பி யழைத்துவிடுங்கள்!" என்று கேட்கிறார்கள்.

"ஹை கமிஷனரைப் பேஷாகத் திருப்பி யழைத்து விடுகிறோம். அதற்கப்புறமாவது எங்கள் தூக்கத்தைக் கலைக்க மாட்டீர்களல்லவா?" என்று இந்திய சர்க்கார் கேட்டால், அந்த நிபந்தனைக்குத் தென்னாப்பிரிக்க இந்தியர்கள் ஒப்புக் கொள்வார்களா என்று மட்டும் தெரிந்து கொள்ள விரும்புகிறோம்!

சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: கே. வி. சீனு, நெ. 63, செங்கு ரெட்டி தெரு, எழும்பூர், சென்னை.


வைஸராய் லின்லித்கோ, தலைவர்கள் மகாநாட்டின் தூது கோஷ்டிக்குத் தமது பதிலைக் காலி நாற்காலிகளுக்கு முன் வாசிக்க வேண்டியதாயிற்று.


இந்திய அரசியல் சம்பந்தமாக "இன்னமும் கதவு திறந்து தானிருக்கிறது!" என்று சமீபத்தில் அமெரி கூறினார்.
சென்ட்ரல் ஜெயில்


ஆகாகான் அரண்மனை
காந்திஜியின் வைத்தியர் டாக்டர் பி.ஸி.ராய்க்கு மகாத்மாவைப் பார்க்க அநுமதி கிடைக்கவில்லை.


MY RESIGNATION
தயாராய் வைத்திருந்த ராஜிநாமாக் கடிதத்தில் வங்காளப் பிரதமமந்திரி பஸ்லுல் ஹக் சுயேச்சையாகக் கையெழுத்துப் போட்ட விதம் இது என்று


வைஸ்ராய் வெகுசிரமப் பட்டுக் காரணங்களைத்
தேடிக் கண்டு பிடித்தார். ஆனால்.....


சிரமம் அத்தனையும் வீணாயிற்று.


ருஷியப் போர் முனையில் இருதரப்பினரும் கடைசிச் சண்டைக்காகப் பெரும்
ஆயத்தங்கள் செய்து வருகிறார்களாம்.


பம்பாய் விமானப்படை
இங்கிலாந்து
ஸ்காத்லாந்து
நியூஸிலாந்து
அர்ஜென்டைன்
“பம்பாய் விமானப்படை” என்று பெயர் தாங்கிய ஆகாசவிமானப்படையில் ப
தேசங்களின் விமானிகள் இருக்கிறார்கள்; ஆனால் மருந்துக்கு ஒரு இந்தியன்
கூடக் கிடையாது என்று தெரிகிறது.

# வைஸராய் கனவு

டில்லி — ஸிம்லா வட்டாரங்களில் பின்வரும் சம்பவத்தைப் பற்றிக் காதோடு காதாகப் பேசி வருகிறார்களென்று தெரிய வருகிறது :

ஒரு நாள் இரவு வைஸராய் லின்லித்கோ பிரபு ஆழ்ந்த நித்திரை செய்து கொண்டிருந்தவர், திடீரென்று தூக்கி வாரிப் போட்டுக் கொண்டு எழுந்திருந்து, 'ஐயோ! ஐயோ!' என்று அலறினாராம். வைஸராயின் அரண்மனையில் தூங்கியவர்கள் எல்லாரும் எழுந்திருந்து ஓடி வந்தார்களாம். வைஸராயின் தேகமெல்லாம் வியர்த்து விறுவிறுத்துக் கொண்டிருந்ததாம். அவருடைய வாயானது "கடவுளே! காப்பாற்று!" என்று (இங்கிலீஷில் தான்) முணுமுணுத்துக்கொண்டிருந்ததாம். "என்ன? என்ன?" என்று கேட்டதற்குச் சற்று நேரம் வைஸராய் பதிலே சொல்லவில்லையாம். டாக்டர்களை அவசரமாக அழைத்தார்களாம். அவர்கள் பரிசோதித்துவிட்டு ஏதோ பயங்கரமான கனவு கண்டு திகில் அடைந்திருக்கிறார் என்று சொன்னார்களாம். எல்லாரையும் போகச் சொல்லிவிட்டு, அந்தரங்கமாகக் கேட்டபோது, முதலில், அவர் வாயிலிருந்து "ரா — ஜீ" முதலிய சப்தங்கள் வெளி வந்தனவாம். இன்னும் ஆசுவாசப் படுத்திக் கேட்டதில், கனவில் ராஜாஜீ வந்து ஏதேதோ கேள்விகள் கேட்டதாகவும் அவற்றிற்குப் பதில் சொல்ல முடியாமல் மூச்சுத் திணறிப் போனதாகவும் தெரிய வந்ததாம்!

மேற்படி கதை உண்மையாயிருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, அதிலடங்கிய விஷயம் உண்மையென்பதில் சந்தேகமில்லை. சமீபத்தில் அதற்கு ஒரு அத்தாட்சி ஏற்பட்டது. தலைவர்கள் மகாநாட்டின் தூதுகோஷ்டி ஒன்று வைஸராயைப் போய்ப் பார்ப்பதென்று ஏற்பாடாகியிருந்தது. தூது கோஷ்டியின் நோக்கம் மகாத்மாவைச் சிறையில் பார்த்துத் தற்கால நிலைமையைப் பற்றிக் கலந்து பேசுவதற்கு வைஸராயிடம் அநுமதி கோருவதுதான். தூது கோஷ்டியை வரவேற்பதற்கு வைஸராயும் சம்மதித்தார். ஆனால் அவர்களுடைய கோரிக்கை இன்னதென்பதை முதலிலேயே எழுத்து மூலம் தெரிவித்துவிட வேண்டுமென்றார். அவ்விதமே தூது கோஷ்டியார் எழுதி அனுப்பினார்கள். பிறகு, வைஸராயிடமிருந்து, மேற்படி கோரிக்கைக்குப் பதிலைத் தாம் எழுதிப் படித்து விடுவதாகவும், அதன் மேல் சம்பாஷிப்பதோ விவாதிப்பதோ முடியாத காரியமென்றும் தகவல் வந்தது. "அப்படியானால் நாங்கள் தூது வரவில்லை; உங்கள் பதிலைத் தபாலிலேயே அனுப்பி விடுங்கள்; படித்துக் கொள்கிறோம்" என்றார்கள் தூது கோஷ்டியார். அவ்விதமே பதில் தபாலில் வந்தது. பிறகு, பத்திரிகைகளிலும் வெளியாயிற்று.

"பதிலை எழுதித்தான் படிப்பேன்; மேற்கொண்டு வாயைத் திறக்க மாட்டேன்" என்று வைஸராய் சொன்னதற்குக் காரணம், ராஜாஜீயின் விஷயத்தில் அவருக்கு ஏற்பட்ட பழைய அநுபவமாய்த்தான் இருக்கவேண்டும். ராஜாஜீயின் கேள்விகளுக்குத் தம்மால் பதில் சொல்ல முடியாதென்றும், தம்முடைய வாய் மொழியைக் கொண்டே தம்மை மடக்கித் திணற அடித்து விடுவாரென்றும் பயந்துதான் வைஸராய் அவ்வாறு சொல்லிவிட்டார் என்று ஊகிக்கலாம்.

தூது கோஷ்டியாரின் கோரிக்கைக்கு வைஸராயின் பதிலைப் பத்திரிகைகளில் படிக்கும்போது நமது மேற்படி ஊகம் ஊர்ஜிதமாகிறது. அந்தப் பதிலிலுள்ள அபத்தங்களை எடுத்துக் காட்டி வைஸராயைத் திணற வைப்பதற்கு ராஜாஜீ கூட வேண்டியதில்லை. நாமெல்லாருமே அவ்விதம் செய்துவிடலாம் போலிருக்கிறது. முக்கியமாக, மேற்படி பதிலில் அடங்கிய மூன்று அபத்தங்களைக் கவனிக்கலாம் :—

1. "காங்கிரஸ் தீர்மானத்தின் காரணமாகத் தேசத்தில் நடந்த நாசவேலைகளின் பொருட்டு காந்திஜி இன்னும் பச்சாத்தாபம் தெரிவிக்கவில்லை" என்று வைஸராய் சொல்கிறார்.

அதாவது, "நான் குற்றவாளி" என்று காந்திஜி ஒப்புக்கொண்டு மன்னிப்பும் கேட்க வேண்டும் என்கிறார்.

சந்தேகத்தின் மேல் கைதியான ஒருவனைப் போலீஸ் ஸ்டேஷனில் அழைத்து வைத்து, "குற்றத்தை ஒப்புக்கொள்" என்று அவனை ஒரு போலீஸ் உத்தியோகஸ்தர் நிர்ப்பந்தித்

தால், அந்த உத்தியோகஸ்தர் பெருங் குற்றஞ் செய்தவராவார். சர்க்கார் சட்டப்படி அவருக்கு வேலை போய்விடும்.

அதே காரியத்தைத்தான் இப்போது வைஸராய் மகாத்மா விஷயத்தில் செய்கிறார். வழக்கு விசாரணை ஒன்றுமில்லாமல் சிறையில் அடைத்துவிட்டு, "குற்றத்தை ஒப்புக் கொள்!" என்று நிர்ப்பந்திக்கிறார். வைஸராய் பதவி வகிப்பதால் அவரைக் கேட்பார் ஒருவருமில்லை. மற்றப்படி இது நியாயம் என்றோ, நாகரிக நடத்தை என்றோ யாரும் சொல்லமாட்டார்கள்.

தம்முடைய காரியம் பிசகு என்று தெரிந்தால் அதை ஒப்புக் கொண்டு பச்சாத்தாபம் தெரிவிப்பதில் மகாத்மாவை மிஞ்சியவர் யாரும் கிடையாது. ஆனால் செய்யாத குற்றத்தை எப்படி ஒப்புக்கொள்ள முடியும்? இல்லாத பொறுப்பை எப்படி ஏற்றுக் கொள்ள முடியும்?

ஒரு நாளும் முடியாது. ஆகவே வைஸராய் சொல்வது போகாத ஊருக்கு வழி என்றுதான் ஏற்படுகிறது. தர்ம நியாயம் என்பது அதில் அணுவளவும் கிடையாது.

நமக்குத் தெரிந்த வரையில் தேசத்தில் நாச வேலைகளுக்கு யார் பேரிலாவது பொறுப்புக் கட்டுவதாயிருந்தால், 'காங்கிரஸ் திட்டம்' என்பதாக ஒன்றை ரேடியோ மூலம் வெளியிட்ட கர்னல் அமெரியின் மேல்தான் கட்ட வேண்டும். நியாயமாக, அவரைத்தான் சிறைப்படுத்த வேண்டும்.

(2) "காந்திஜியைச் சிறையில் பார்த்துப் பேச அநுமதி வேண்டும்" என்ற கோரிக்கையை முஸ்லிம்கள், தாழ்த்தப்பட்டவர்கள், சுதேச மன்னர்கள் ஆகியோர் ஆதரிக்கவில்லையாம்! அநுமதி மறுப்பதற்கு இது ஒரு காரணம்.

அரசியல் பித்தலாட்டத்துக்கு ஒரு எல்லை உண்டு என்று எண்ணியிருந்தோம். அந்த எல்லையையும் இந்த வாதம் தாண்டி விட்டது! காந்திஜியைக் கைது செய்தபோது முஸ்லிம்கள், தாழ்த்தப்பட்டவர்கள், சுதேச மன்னர்கள் முதலியோரின் சம்மதம் பெற்றுத்தான் கைது செய்தார்களா? இந்திய சர்க்கார் தாங்கள் செய்யும் மற்ற எல்லாக் காரியங்களையும் மேற்படியார்களைக் கேட்டுக் கொண்டுதான் செய்கிறார்களா?

பின் காந்திஜியைப் பார்க்க வேண்டுமென்ற கோரிக்கைக்கு மட்டும் மேற்படியார்களின் சம்மதம் என்னத்திற்கு?

காந்திஜியின் கையில் இந்தியாவை ஒப்படைத்து விடும் உத்தேசம் இருந்தால், முஸ்லிம்கள் முதலியவர்களைக் கேட்க வேண்டுமென்று சொல்வதில் அர்த்தமுண்டு. வெறுமனே அவரைப் பார்த்துப் பேசக் கூட அநுமதி கொடுக்காததற்கு முஸ்லிம்கள் முதலியோர் மேல் பழியைப் போடுவதில் ஏதேனும் அர்த்தமிருக்கிறதா? அல்லது வைஸராய் அநுமதி கொடுத்தால் மேற்படியார்கள் வந்து குறுக்கே மறிப்பார்களா? அதற்கு வைஸராய் அவ்வளவு தூரம் பயப்படுகிறாரா? அப்படியானால் இந்தியாவை இப்போது ஆளுவது யார்? பிரிட்டிஷாரா? முஸ்லிம்களும் தாழ்த்தப்பட்டவர்களும் சுதேச மன்னர்களுமா? இவர்கள்தான் இந்தியாவை ஆளுகிறவர்கள் என்றால் பிரிட்டிஷார் இங்கு என்னத்திற்காக இருக்க வேண்டும்? இவர்களிடமே பொறுப்பை ஒப்புவித்து விட்டுப் போய்த் தொலைவதுதானே?

(3) "தனி மனிதராகிய காந்திஜி ஒருவருடைய இஷ்டப்படி தேசிய சர்க்கார் அமைக்க வேண்டும் என்று நீங்கள் சொல்கிறீர்கள். அதற்கு நான் சம்மதிக்க முடியாது" என்கிறார்.

இல்லாததைச் சொல்லும் விஷயத்தில் இதற்கு ஈடு சோடு ஒன்றுமே கிடையாதென்று கூறலாம்.

எதிலிருந்து இவ்விதம் வைஸராய் அர்த்தம் செய்துகொண்டாரோ, அது அவருக்கும் அவரைப் படைத்த கடவுளுக்குந்தான் தெரியும்.

எல்லாக் கட்சித் தலைவர்களும், சமூகத் தலைவர்களும் அடங்கிய சர்க்காரைத் தான் "தேசிய சர்க்கார்" என்று இதுவரை காங்கிரஸ் வாதிகளும் மற்றவர்களும் சொல்லி வந்திருக்கிறார்கள்.

ஜனாப் ஜின்னாவின் தலைமையில் இந்த மாதிரி தேசிய சர்க்கார் அமைந்தாலும் தமக்குச் சம்மதம் என்று மகாத்மாவே சொல்லியிருக்கிறார். இப்படியெல்லாமிருக்க, மகாத்மா ஒருவரின் இஷ்டப்படி தேசிய சர்க்கார் அமைக்கத் தூது கோஷ்டியார் விரும்புகிறார்கள் என்னும் அபிப்பிராயம் வைஸராய்க்கு எப்படி ஏற்பட்டது? கனவா? கற்பனையா? மனப் பிராந்தியா? அல்லது மயக்கமா?

உண்மையில், தூது கோஷ்டித் தலைவர்கள் கேட்டதென்ன?

"இந்தியாவில் ஒற்றுமை ஏற்பட்டால் தேசிய சர்க்கார் அமைக்கத்

தயார்'' என்று பிரிட்டிஷ் சர்க்காரின் பிரதிநிதிகள் அடிக்கடி சொல்லி வருகிறார்கள். நேற்றுக்கூட பிரிட்டிஷ் பிரபுக்கள் சபையில் உதவி இந்தியா மந்திரி லார்டு மன்ஸ்டர் என்பவர் மேற்படி பாடத்தை ஒப்புவித்தார்.

'' ஒற்றுமை '' '' ஒற்றுமை ''என்று இவர்கள் சொல்லும் போதெல்லாம் '' காங்கிரஸுக்கும் மற்றக் கட்சிகளுக்கும் ஒற்றுமை ''யைத்தான் குறிப்பிடுகிறார்கள்.

காங்கிரஸ் அவசியமில்லையென்றால், மற்றக் கட்சித் தலைவர்களிடமே ராஜ்யத்தை ஒப்புவித்து விடலாமல்லவா? அவ்விதம் எப்போது செய்யவில்லையோ அப்போது எந்த ஒற்றுமைத் திட்டத்துக்கும் காங்கிரஸின் சம்மதம் இன்றியமையாதது என்று தெரிகிறது. இந்த சம்மதம் பெறுவதற்காகத்தான் காந்திஜியைப் பார்க்க சமரசத் தலைவர்கள் அநுமதி கேட்கிறார்கள்.

''சமரச ஏற்பாடு செய்து கொள்ளுங்கள்!'' என்று ஒருபுறம் சொல்லிக் கொண்டே, மற்றொரு புறத்தில் அந்த சமரசத்துக்கு இன்றியமையாத காங்கிரஸ் தலைவர்களைச் சிறையிலே கூடப் பார்க்கக் கூடாதென்று தடுப்பதிலிருந்து என்ன ஏற்படுகிறது?

இந்திய அதிகாரவர்க்கம், இந்தியத் தலைவர்களுக்குள் ஒற்றுமை உண்டாவதை விரும்பவில்லை என்றுதான் ஏற்படுகிறது. ஒற்றுமையின்மையைக் காரணமாகச் சொல்லிக் கொண்டு ஆளும் அதிகாரத்தைத் தாங்களே வைத்துக் கொள்ள விரும்புகிறார்களென்றுதான் ஏற்படுகிறது.

'' ஆனால் இதெல்லாந்தான் தெரிந்த விஷயமாயிற்றே? அதிகாரத்தை மாற்றும் எண்ணந்தான் அதிகாரவர்க்கத்துக்கு இல்லையே? பின் எதற்காக அடிக்கடி வைஸ்ராயிடம் போக வேண்டும்? போய் 'இல்லை' என்ற பதிலைப் பெற வேண்டும்?'' என்று கேட்கலாம்.

''தெரிந்த விஷயம்'' என்றால் யாருக்குத் தெரிந்த விஷயம் என்ற கேள்வி. நமக்குத் தெரிந்த விஷயந்தான். டில்லியில் கூடிய சமரசத் தலைவர்களுக்கும் தெரிந்த விஷயந்தான். ஆனால் உலகத்துக்குத் தெரிந்த விஷயம் என்று சொல்ல முடியாது. சீனாவுக்கும் அமெரிக்காவுக்கும் ருஷியாவுக்கும் தெரிந்த விஷயம் என்று சொல்ல முடியாது. இங்கிலாந்திலுள்ள சாதாரண ஜனங்களுக்குக் கூட அது நன்றாய்த் தெரியாது.

பிரிட்டிஷ் மந்திரிகளும் இராஜதந்திரிகளும், இந்திய அதிகாரவர்க்கத்தின் கையாட்களும் செய்துவரும் பிரசாரமானது மேற்கண்டவர்கள் எல்லாம் உண்மையை அறிய முடியாமல் செய்து வருகிறது.

இந்தியாவின் சுதந்திர முயற்சிக்கு இப்போது அநுகூலமாயிருக்கும் சாதனம் ஒன்றே ஒன்றுதான். அமெரிக்கா முதலிய நாடுகளில் இந்தியாவின் சுதந்திரக் கோரிக்கை விஷயத்தில் இருந்து வரும் அநுதாபந்தான் அது.

இந்த அநுதாபத்தை நாம் மேலும் மேலும் வளர்ப்பதற்கு முயல வேண்டும். பிரிட்டிஷ் பிரசாரத்தினால் அது குறைந்து போகும்படி விடக் கூடாது. '' இந்தியாவின் பிரச்னை இன்னும் தீராமல் இருக்கிறது'' என்பதை அடிக்கடி உலகத்துக்கு ஞாபகப் படுத்திக் கொண்டே இருக்க வேண்டும்.

அது தீராமல் இருப்பதற்கு பிரிட்டிஷார் சொல்லும் காரணம் உண்மையல்லவென்பதையும் அடிக்கடி எடுத்துக் காட்ட வேண்டும்.

இந்தியாவில் ஒற்றுமை ஏற்படுவதற்குக் குறுக்கே நிற்பது இந்திய அதிகார வர்க்கந்தான் என்பதை ஓயாமல் உலகத்துக்குச் சொல்லிக் கொண்டே இருக்க வேண்டும்.

இந்த நோக்கத்துடன் பார்க்கும் போது, வைஸ்ராயிடம் தூது கோஷ்டி போக எத்தனித்தது, பிறகு போகாமல் நின்றது — இதெல்லாமே உபயோகமானதுதான் என்பது தெரிய வரும்.

ஆனால், இத்துடன் திருப்தியடைந்து நின்று விடுவதிற்கில்லை. மேலே என்ன செய்வதென்பது பற்றித் தலைவர்கள் யோசித்து முடிவு செய்ய வேண்டும். முக்கியமாக, இங்கிலாந்துக்கும் அமெரிக்காவுக்கும் ஒரு தூது கோஷ்டி போவது பற்றி அவர்கள் யோசிக்க வேண்டும். 'பாஸ்போர்ட்' கொடுக்க மறுத்து விட்டால் என்ன செய்வதென்று தயங்க வேண்டியதில்லை. 'பாஸ் போர்ட்' மறுக்கப்பட்டால் அதையும் ஒரு பிரசார சாதனமாக ஆக்கிக் கொள்ளலாமல்லவா?

எந்த வழியிலாவது, இந்தியாவின் அரசியல் பிரச்னை தீராமல் பாக்கியிருக்கிறது என்பதை உலகத்துக்கு எடுத்துக் காட்டிக் கொண்டிருப்பது நமது தற்போதைய நிலையில் மிகவும் அவசியமாகும்.

# அக்கப் போர்

*"காசி"*

"**க**தர் வஸ்திராலயங்களில் எல்லாம் 'ஸ்டாக் எடுப்பதால் கடை மூடப்பட்டிருக்கிறது' என்று வாரத்தில் ஆறு நாளைக்கு நோட்டீஸ் ஒட்டுகிறார்களே, ஏன்?" என்று ஒருவர் கேட்கிறார்.

ஸ்டாக் எங்கே யிருக்கிறதென்று பூதக் கண்ணாடி வைத்துப் பரிசோதித்துக் கொண்டிருக்கலாம்.

* * *

இந்திய சட்ட சபையில் வரவு செலவுத் திட்டத்தைப் பற்றி மாதக் கணக்காகப் பேசிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் வங்க கவர்னரோ மந்திரிகளை ராஜிநாமா பண்ணச் செய்து மாகாண வரவு செலவுத் திட்டத்தை ஒரே நிமிஷத்தில் நிறைவேற்றி வைத்தார்.

இதிலிருந்து ஜன நாயகத்தால் அநாவசியமாகக் காலதாமதம் ஏற்படுகிறது என்று தெரிகிறதல்லவா?

* * *

நல்ல காலம் மிகச் சீக்கிரம் வரப்போகிறதென்று ஒரு பிரபல ஜோசியர் கூறுகிறார்.

ஆனால் அது வரும்போது தற்கால ரயில்களில் பிரயாணஞ் செய்யாதிருக்க வேண்டுமே என்று பிரார்த்திக்கிறேன்.

* * *

"நேச தேசங்கள் யுத்தத்தில் ஜயிக்க வேண்டுமென்பதற்காக சென்னையில் ஒரு ஹோமம் நடந்தேறியது. அதை கவர்னர் துரை பார்வையிட்டார்" என்று ஒரு செய்தி பத்திரிகைகளில் பிரசுரமாகி யிருக்கிறது.

இந்தப் புதிய ஆயுதத்தைப் பற்றி எதிரிகள் தெரிந்துகொண்டு விடுவார்களே. இதை ஸென்ஸார்கள் பத்திரிகையில் பிரசுரிக்க எப்படி அநுமதித்தார்கள் என்று தெரியவில்லை.

* * *

அமெரிக்க ஜனாதிபதி ரூஸ்வெல்ட்டிடம் இந்தியாவைப் பற்றிப் பூர்வாங்கமான ரிப்போர்ட் செய்வதற்காக அவருடைய தூதர் பி ிப்ஸ் அமெரிக்கா போகப் போகிறாராம்.

அவர் சென்னையில் நாம் கூவம் நதி, செத்த காலேஜ், உயிர் காலேஜ் முதலியவற்றைப் பார்வையிட்டதைப் பற்றிச் சொல்ல மறக்க மாட்டாரென்று நம்புகிறேன்.

* * *

காகிதப் பஞ்சத்தை உத்தேசித்துப் பள்ளிக்கூடப் பரீட்சைகளில் அதிகப்படியான கேள்விகள் கேட்கவேண்டாமென்று சர்க்கார் உத்தரவிட்டிருக்கிறார்களல்லவா? இந்த உத்தரவு, கேள்விப் பேப்பர் தயாரிக்கும் பல ஆசிரியர்களுக்குக் கவலையை ஏற்படுத்தி யிருக்கக்கூடும். ஆனால் கெட்டிக்கார ஆசிரியர்கள் பின் வருமாறு கிளாஸுக்காக ஒரே ஒரு கேள்வியைக் கேட்டு விட்டுப் பேசாதிருக்கலாம்:

சரித்திரம் :—இந்தியாவில் முதலில் ஹிந்துக்களின் ராஜ்யம் ஏற்பட்டதி லிருந்து, லின்லித்கோ பிரபு வைஸ்ராய் பதவியிலிருந்து விலகப் போகும் வரை நடந்த, நடக்கப் போகும் சம்பவங்களைச் சொல்லவும்.

ஆங்கிலம் :—உங்களுக்குப் பாடமாக வைத்திருக்கும் புத்தகம் திடீரென்று மறைந்து போய்விடுகிறதென்று வைத்துக் கொள்ளுங்கள். அந்தப் புத்தகத்தை மறுபடியும் அச்சுக்குக் கொடுக்க ஒரு பிரதி தயார் செய்யவும்.

* * *

சென்னையில் ஏ. ஆர். பி. யில் வேலை செய்யும் சிப்பந்திகள் பலருக்கு ரொட்டி செய்யக் கற்றுக் கொடுக்கப் போகிறார்களாம்.

அத்துடன் அதைத் தின்னப் போகிறவர்களுக்கும் அதை எப்படித் தின்பது, எப்படி ஜீரணித்துக் கொள்வது என்று சொல்லிக் கொடுத்தால் புண்ணியமா யிருக்கும்!

* * *

கிழக்கு வங்காளத்தில் எங்கேயோ முதல் முதல் விமான அபாயச் சங்கு ஊதியபோது ஒரு வீட்டிலிருந்த தம்பதிகள் என்ன செய்வதென்று தெரியாமல் விழுந்தடித்துத் தெருப் பக்கம் ஓடினார்களாம். அப்பொழுது அவர்களுடைய சிறிய பையன் சிரித்துக்கொண்டே இருந்தானாம்.

"ஏன் சிரிக்கிறாய்?" என்று அவனைக் கேட்டபோது "அப்பாவும் அம்மாவும் சேர்ந்து வெளியில் போகிறது இதுதான் முதல் தடவை" என்றானாம்.

இணையற்ற சமூகச் சித்திரம்



# என் மனைவி

இப்பொழுது கீழ்க்கண்ட இடங்களில்
நடைபெறுகிறது.

ராமகிருஷ்ணா டாக்கீஸ் - திருச்சி
நாராயணா டாக்கீஸ் - பொள்ளாச்சி
பேலஸ் டாக்கீஸ் - வாடிப்பட்டி
பொன்னு ஸினிமா - போடி
ஷண்முகானந்தா ஸினிடோன் - சீர்காழி
ஜாய்ஸ் டாக்கீஸ் - நெல்லூர்
லக்ஷ்மி டாக்கீஸ் - திப்தூர்



*Distributors:*

**FAMOUS TALKIE DISTRIBUTORS**

Madras — Madura — Ernakulam
Bangalore, & Bezwada

---



நாராயணராவ் -- கமலாகோட்னீஸ்
நடிக்கும்

# செல்வ லக்ஷ்மி

(தெலுங்கு)

டைரக்ஷன்
S. சௌந்தரராஜன்

TNT

TAMIL NADU TALKIES Production

Studio NEWTONE

# தீரர் சத்தியமூர்த்தி

"கல்கி"

"சத்தியமூர்த்திக்காக இரண்டு பக்கம் இருக்கிறது. கட்டுரையை அதற்குள் எழுதிக் கொடுங்கள்!" என்று துணை ஆசிரியர் சொன்னதைக் கேட்டதும், நான் அசந்து போய் உட்கார்ந்து விட்டேன். ஒன்றும் எழுதுவதற்கே ஓடவில்லை. இரண்டு பக்கம் எங்கே? இருபத்தைந்து வருஷத்து இடைவிடாத தேசத் தொண்டு எங்கே?

இதை நினைக்கும்போது, ஸ்ரீ சத்தியமூர்த்தி காலமாவதற்கு இதைவிட யுக்தமில்லாத காலத்தைத் தேர்ந்தெடுத்திருக்க முடியாது என்று தோன்றுகிறது.

ஸ்ரீ கஸ்தூரி ரங்கய்யங்கார், ஸ்ரீ ஏ. ரங்கசாமி அய்யங்கார் முதலியவர்கள் காலமான போது நமது தினசரிப் பத்திரிகைகள் செய்த அமர்க்களம் ஞாபகம் வருகிறது. பக்கம் பக்கமாகவும் பத்தி பத்தியாகவும் ஒரு மாதம் வரையில் அவர்களைப் பற்றிய அநுதாபச் செய்திகளும், குணாதிசய வர்ணனைகளும், கூட்ட நடவடிக்கைகளும் வந்த வண்ணமிருந்தன. ஆனால் ஸ்ரீ சத்தியமூர்த்திக்கு மொத்தத்தில் மூன்றரைப் பத்திக்கு மேல் கிடைக்கவில்லை!

பத்திரிகைகளுக்குத்தான் காகிதப் பஞ்சம், இடப் பஞ்சம், சர்க்கார் கட்டுப்பாடு — எல்லாம். ஆனால், மனிதர்களுக்கு என்ன பஞ்சம் வந்தது? — இதை நினைக்க நினைக்கத்தான் இந்த உலக வாழ்க்கையின் புகழ், கீர்த்தி, பாராட்டு, 'ஜே' கோஷம் எல்லாம் எவ்வளவு அநித்தியமானவை — நீர் மேல் குமிழி போன்றவை — என்பதை நான் நன்கு உணர்கிறேன்.

லோகமானிய திலகர், தேசபந்து தாஸ், டாக்டர் டாகூர் முதலியவர்களின் பிரேத ஊர்வலங்களைப் பற்றிக் கேட்டிருக்கிறோம். ஸ்மசானத்தில் மூன்று லட்சம், நாலு லட்சம் ஜனங்கள் கூடியிருந்தார்கள் என்று படித்திருக்கிறோம். அந்த மகத்தான ஜனத் திரள்களின் பகுதியைப் புகைப் படங்களிலும் பார்த்திருக்கிறோம்.

தமிழ்நாட்டின் சிறந்த தலைவர்களில் ஒருவரான ஸ்ரீ சத்தியமூர்த்திக்குக் கடைசி மரியாதை செய்ய ஸ்மசானத்தில் எத்தனை பேர் கூடியிருந்தார்கள்? ஐம்பது அறுபது பேர் இருக்கலாம்! அல்லது, பொதுக் கூட்டங்களின் எண்ணிக்கையை அந்தந்தக் கட்சிக்காரர்கள் மதிப்பிடும் முறையில் மதிப்பிட்டாலும், நூறு பேருக்கு மேல் இராது! ஸ்ரீ சத்தியமூர்த்தி ஆவி வடிவில் அங்கே நின்று இந்தக் காட்சியை மட்டும் பார்த்திருந்தாரானால், — இருபதினாயிரம் முப்பதினாயிரம் ஜனங்கள் அடங்கிய பொதுக் கூட்டங்களில் தாம் கர்ஜனை செய்ததையும் இந்த நூறுபேரையும் ஒப்பிட்டுப் பார்த்துக் — கலகலவென்று சிரித்திருப்பார் என்பதில் சந்தேகமில்லை.

அந்த நூறுபேரடங்கிய கூட்டத்தில் பத்திரிகைகளில் பெயர் வரக்கூடிய பிரமுகர்கள் ஐந்தாறு பேர்தான் இருந்தார்கள். டாக்டர் சுப்பராயன், ஸ்ரீ வேங்கடசாமி நாயுடு, ஸ்ரீ சர்க்கரைச் செட்டியார், ஸ்ரீ ஜே. சிவஷண்முகம், அவ்வளவுதான். — இல்லை, இன்னும் ஒரு பிரமுகரும் இருந்தார். நகர சபைக் கமிஷனர் ஸ்ரீ புல்லா ரெட்டி ஐ. சி. எஸ். ஸையும் அங்கே பார்த்தேன். ஸ்ரீ சத்தியமூர்த்தி சென்னை மேயராயிருந்த போது அவருக்கும் ஸ்ரீ புல்லா ரெட்டிக்கும் அவ்வளவு ஒத்துக் கொள்ளவில்லை என்பது அந்தக் காலத்தில் பகிரங்க இரகசியமாயிருந்தது. ஆனாலும், ஸ்ரீ புல்லா ரெட்டியார் மாஜி மேயருக்குத் தமது மரியாதையைத் தெரிவித்துக் கொள்ள ஸ்மசானத்துக்கு வந்திருந்தார். ஆனால் ஸ்ரீ சத்தியமூர்த்தியின் பிரபல சிநேகிதர்கள் எல்லாரும் எங்கே? முக்கியமாக, மயிலாப்பூர்ப் பெரிய மனுஷர்கள் ஒருவரையும் ஏன் காணவில்லை? லஸ் சர்ச் ரோட்டிலிருந்து — மோப்ரேஸ் ரோட்டிலிருந்து — லாயிட்ஸ் ரோட்டிலிருந்து — எட்வர்ட் எலியட் ரோட்டிலிருந்து—கச்சேரி ரோட்டிலிருந்து — வடக்கு தெற்கு கிழக்கு மேற்கு மாட வீதிகளிலிருந்து — ஏன் ஒருவரையும் அங்கே காணவில்லை? இத்தனைக்கும் அன்று ஞாயிற்றுக் கிழமை ஆயிற்றே? கோர்ட், ஆபீஸ் ஒன்றுமே கிடையாதே?

இந்திய சட்ட சபைத் தேர்தலில் ஸ்ரீ ஏ. ராமசாமி முதலியாரைத் தோற்கடித்து வெற்றி பெற்ற போதும், சென்னை மேயர் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட போதும் ஸ்ரீ சத்திய மூர்த்திக்கு நடந்த உபசாரங்கள் எனக்கு ஞாபகம் இருக்கின்றன! எத்தனை டின்னர்கள்? எத்தனை டீ பார்ட்டிகள்? எவ்வளவு வாழ்த்துக் கூட்டங்கள்? உபசாரப் பத்திரங்கள்? — பூமாலைகளுக்குத்தான் அளவு

சங்கை உண்டா? "சத்தியமூர்த்தி எங்கே?" என்று கேள்வி போட்டு, "பூமாலைக்குள் புதைந்து கிடக்கிறார்!" என்று பதில் சொல்லி — விகடம் செய்யும்படியாக வெல்லாம் இருந்தது. அதற்கும் இதற்கும் எவ்வளவு வித்தியாசம்?

நான் நினைக்கிறேன்: ஸ்ரீ சத்தியமூர்த்தியின் மனோ நிலை அந்திய காலத்தில் ரொம்பவும் மாறியிருக்கவேண்டும். புகழும் பூமாலையும் ஜே கோஷமும் எவ்வளவு அர்த்தமற்றவை என்பதை அவர் உணர்ந்திருக்கவேண்டும். உணர்ந்து, அமைதியான ஆடம்பர மற்ற அந்தியக் கிரியைகளை அவர் விரும்பியிருக்க வேண்டும். பகவான் அவருடைய கடைசி மனோ ரதத்தை இவ்விதம் நிறைவேற்றி வைத்தார் போலும்!

ஸ்ரீ சத்திய மூர்த்தி அவ்விதம் விரும்பியிருந்தால் அதில் சம்பத் தகாதது ஒன்றுமிராது. ஏனெனில், அவருடைய இருபத்தைந்து வருஷத்து அரசியல் வாழ்க்கையில் அமைதி என்பதே அணுவளவும் கிடையாது. ஒரே புயலும், மழையும், போர் முழக்கமும், வீர கர்ஜனையுந்தான். *

**போர்** என்றால், அதுவும் வாக்குப் போர் என்றால், ஸ்ரீ சத்தியமூர்த்தியின் உற்சாகத்தைச் சொல்லி முடியாது. அதிகமாக யோசனை கூடச் செய்யாமல், போர்க்களத்தில் குதித்து விடுவார். குதித்துவிட்டால், அப்புறம் சண்டப் பிரசண்டந்தான்!

ஸ்ரீ சத்தியமூர்த்தி மிதவாதிகளுடன் போரிட்டிருக்கிறார். ஜஸ்டிஸ் கட்சியாருடன் பெரும் போர் நடத்தி யிருக்கிறார். அதிகார வர்க்கத்துடன் இடைவிடாத கடும் போர் புரிந்து வந்திருக்கிறார். காங்கிரஸிற்குள்ளேயே தமக்குச் சரியென்று தோன்றிய வேலைத் திட்டங்களுக்காகத் தீவிரமாகச் சண்டை போட்டிருக்கிறார். மகாத்மாவுடனேயே போரிட்டிருக்கிறார்.

பிரம்மதேவன் பேனாவை விஷத்தில் ஒரு தடவையும் அமிர்தத்தில் ஒரு தடவையும் தோய்த்து எடுத்து ஸ்ரீ சத்தியமூர்த்தியின் நாவில் எழுதி யிருக்க வேண்டும்! எதிராளிகளைத் தாக்கும்போது அவருடைய நாவிலிருந்து விஷத் தோய்ந்த சொல்லம்புகள் சரசரவென்று கிளம்பும்.

* இதுவரையில் படித்த துணை ஆசிரியர் மறுபடியும் வந்து, "சத்தியமூர்த்தியைப் பற்றி எவ்வளவு வேணுமானாலும் எழுதுங்கள்; இந்த இதழில் போடுகிற வரையில் போட்டு விட்டுப் பாக்கியை அடுத்த இதழில் போடலாம்" என்றார். "ரொம்ப வந்தனம்" என்றேன்.



மேயர் ஸ்ரீ சத்தியமூர்த்தி

சில சமயம் ஒரே வார்த்தையினால் எதிராளிகளை மடக்கி உட்கார வைத்து விடுவார். மறுபடியும் அவர்கள் தலை கிளம்ப முடியாதபடி அடித்து விடுவார். இதற்கு ஒரு பிரசித்தமான உதாரணம் உண்டு. 1920-ம் ஆண்டில் திருநெல்வேலியில் நடந்த தமிழ் மாகாண மகாநாட்டில் இது நேர்ந்ததென்று ஞாபகம்.

ஸ்ரீ சத்தியமூர்த்தி பிரபலமாகி வந்த காலத்தில், தமிழ்நாட்டில் ஸ்ரீ வி. எஸ். சீனிவாச சாஸ்திரியாரின் பெயர் ரொம்பவும் பிரபலமா யிருந்தது.

சாஸ்திரியார் அரசியலில் மிதவாதி. அதாவது, பிரிட்டிஷ் சர்க்காருடன் ஒத்துழைத்து மனுச் செய்து அவர்களுடைய தயவைக் கொண்டு இந்தியா முன்னேற வேண்டுமென்று நம்பிய கூட்டத்தைச் சேர்ந்தவர். ஆனால் அந்தக் காலத்தில் மிதவாதிகளின் செல்வாக்கு தேசத்திலும் காங்கிரஸிலும் இன்னும் குறைந்துவிடவில்லை.

"இங்கிலீஷ் பேச்சுக் கேட்க வேண்டுமென்றால், சீனிவாச சாஸ்திரியாரிடம் கேட்க வேண்டும். அவர் மாதிரி சுத்தமாகவும் மதுரமாகவும் இங்கிலீஷ் பேசக் கூடியவர்கள் இங்கிலாந்திலேயே இரண்டொருவர்தான் உண்டு" என்று அந்தக் காலத்தில் சொல்வார்கள்.

அதோடு, கோகலே சென்னைக்கு வந்து சீனிவாச சாஸ்திரியை அரசியல் தொண்டுக்கு அழைத்ததும், சாஸ்திரியார் தியாக வாழ்க்

கையை மேற்கொண்டு கோகலேயின் 'இந்திய ஊழியர் சங்க'த்தில் சேர்ந்ததும், கோகலேக்குப் பிறகு சாஸ்திரியார் மேற்படி சங்கத்தின் தலைவரானதும் அப்போது புதிய சம்பவங்களாயிருந்தன.

அப்படிப்பட்ட நிலைமையில் சாஸ்திரியாரைத் தாக்கி அவருடைய செல்வாக்கைக் குறைக்க வேண்டிய அவசியம் ஸ்ரீ சத்தியமூர்த்திக்கு ஏற்பட்டது.

ஒரே ஒரு வார்த்தையில் இந்தக் காரியத்தை அவர் செய்து விட்டார்!

அப்படியொன்றும் ரொம்பக் கடுமையான வார்த்தையில்லை — அவலட்சணமான வசை மொழி இல்லை — நல்ல அழகான சம்ஸ்கிருத வார்த்தைதான்!

அவருடைய தனித்த கம்பீரமான குரலில் — தீர்க்கமான உச்சரிப்பில் — "ஸ்ரீமான் சீனிவாச சாஸ்திரி ..." என்று சொல்லி ஒருகணம் நிறுத்தினார். பிறகு இன்னும் தீர்க்கமாக "... மகானுபாவன்!" என்றார். உடனே அந்தப் பெரிய சபையில் ஒரு கலகலப்பும் சிரிப்பும் கரகோஷமும் கலந்து கிளம்பின. அந்தச் சிரிப்பானது, ஸ்ரீ சீனிவாச சாஸ்திரியின் அரசியல் கொள்கையைப் பார்த்துத் தேசமே சிரித்தது போலிருந்தது.

பிறகு, சீனிவாச சாஸ்திரியின் பெயரைப் படித்த போதெல்லாம் — கேட்ட போதெல்லாம் — "மகானுபாவன்" என்று ஜனங்கள் உடன் சேர்த்துக் கொண்டார்கள். சாஸ்திரியார் எங்கேயாவது பேசுவதாயிருந்தால், பேச்சைக் கேட்க வருகிறவர்கள் "சீனிவாச சாஸ்திரி — மகானுபாவன்" என்று வாய்க்குள் முணுமுணுத்தவண்ணமிருந்தார்கள். ஸ்ரீ சீனிவாச சாஸ்திரியார் அதற்குப் பிறகு எத்தனையோ துறைகளில் சிறப்புக்களை அடைந்து பொது மக்களின் அபிமானத்தையும் மரியாதையையும் பெற்றிருக்கிறார். ஆனால், அவருடைய அரசியல் வாழ்க்கை மட்டும் அந்த 'மகானுபாவர்' பட்டம் கிடைத்ததோடு முடிந்து விட்டதென்றே கருத வேண்டும்.

நேற்று நடந்தது போல் எனக்கு ஞாபகம் இருக்கிறது. திருச்சி டவுன் ஹாலுக்கு எதிரில் பிரம்மாண்டமான கூட்டம் கூடியிருந்தது. (அப்போதெல்லாம் இரண்டாயிரம் பேர் கூடினாலே கூட்டம் 'பிரம்மாண்டத்'தான்!) பெரும்பாலும் மாணாக்கர்கள். அப்போதுதான் ஸ்ரீ சத்தியமூர்த்தி இங்கிலாந்துக்குக் காங்கிரஸ் தூதராய்ப் போய் விட்டுத் திரும்பி வந்திருக்கிறார். எனவே, அவருடைய தோற்றத்திலும் பேச்சிலும் ஒரு பெருமிதம் காணப்படுகிறது. இங்கிலாந்தில் தாம் செய்த பிரசங்கங்களைப் பற்றியும் தம்மைக் கேட்கக் கூடிய கூட்டங்களைப் பற்றியும் விவரித்து வருகிறார். நாங்கள் எல்லாரும் வாயில் யானை புகுந்தால்கூடத் தெரியாத நிலையில் அண்ணாந்து கேட்டுக் கொண்டிருக்கிறோம். அப்போதெல்லாம் பிரசங்கிகளை உற்சாகப் படுத்துவதற்குக் கரகோஷம் செய்யக்கூட நம்மவர்களுக்குத் தெரியாது.

ஸ்ரீ சத்தியமூர்த்தி சொல்கிறார் :—

"அயர்லாந்திலே ஒரு பொதுக் கூட்டத்திலே பேசினேன். இங்கே கூடியிருக்கும் கூட்டத்தை விடப் பெரிய கூட்டம். இந்தியாவின் சுதந்திரக் கோரிக்கையை ஆணித் தரமாக நான் எடுத்துச் சொல்லி வந்தேன். அப்போது கூட்டத்தின் ஒரு மூலையிலிருந்து ஒரு ஆங்கிலேயன் 'இந்தியாவில் சமூகக் கலவரங்கள் நடப்பதில்லையா?' என்று கேட்டான். உடனே, நான், 'ஐயா! இந்தியாவில் சமூகக் கலவரங்கள் நடப்பதாகவே வைத்துக் கொள்வோம். ஆனால், ஆண்டவன் இங்கிலீஷ்காரனை உலகத்தின் ஸ்பெஷல் போலீஸ்காரனாக எப்போது நியமித்தார்?' என்று கேட்டேன் ..."

ஸ்ரீ சத்தியமூர்த்தி இவ்விதம் சொன்னதும் எங்களில் உற்சாகிகள் சிலர் கையைத் தட்டி ஆர்ப்பரித்தோம். பிரசங்கி அரை நிமிஷம் சும்மா இருந்துவிட்டுத் தொடர்ந்து பேசினார் :

"நான் சொன்ன பதிலைக் கேட்டு நீங்கள் கை தட்டினீர்கள். ரொம்ப சந்தோஷம்.

ஆனால் உங்களுக்கு ஒன்று சொல்கிறேன். அவ்வாறு நான் அந்த ஆங்கிலேயனுக்குப் பதில் சொன்னபோது அந்தக் கூட்டத்திலே இருந்தவர்கள் உங்களைக் காட்டிலும் நூறு மடங்கு உற்சாகத்துடன் கையைத் தட்டினார்கள்!" என்றார்.

நாங்கள் மறுபடியும் கை தட்டினோம். ஆனால், "இதிலேகூட இங்கிலீஷ்காரர்களுக்கு நாம் குறைந்துவிட்டோமே?" என்ற வெட்கத்தினால் முன்னைக் காட்டிலும் ஸ்வரம் குறைந்துதானிருந்தது.

மேலே சொன்னது ஸ்ரீ சத்தியமூர்த்தி இங்கிலீஷில் செய்த பிரசங்கம். வெள்ளைச் சட்டை யணிந்த மாணுக்கர் — வக்கீல்கள் — முதலியவர் அதிகமாயுள்ள கூட்டங்களில் ஸ்ரீ சத்தியமூர்த்தி இங்கிலீஷில் பேசுவார். மற்றப்படி சாதாரண ஜனங்கள் அதிகமாயுள்ள கூட்டங்களில் தமிழில்தான் பேசுவார். ஆங்கிலப் பேச்சை விடத் தமிழ்ப் பேச்சு சுவாரஸ்யத்திலோ, கார சாரத்திலோ குறைந்திராது. இங்கிலீஷ் நன்ருய்ப் பேசத் தெரிந்தவர்களுக்குள்ளே முதன் முதலில் தமிழிலும் பேசத் தொடங்கிப் பொது ஜனங்களின் சித்தையைக் கவர்ந்தவர் ஸ்ரீ சத்திய மூர்த்தி என்றுதான் நினைக்கிறேன்.

அந்த நாளில் தமிழ்நாடெங்கும் ஒரு அரசியல் பல்லவி அதிகமாக அடிபட்டு வந்தது. ஸ்ரீ சத்தியமூர்த்தியின் ஸாஹித்யந்தான் அது. நாலு பேர் சேர்ந்து அரசியலைப் பற்றிப் பேசத் தொடங்கினுல் அவர்களில் யாராவது ஒருவர், திடீரென்று,

"அவன்தோல் வெளுப்பாம்!
என்தோல் கறுப்பாம்!"

என்று தீர்க்கமான குரலில் சொல்லுவார். மற்றவர்களின் முகத்தில் ஒரு உற்சாகம் காணப்படும். "அடாடா! சத்தியமூர்த்தியின் பேச்சே பேச்சு!" என்பார்கள்.

மேற்படி பல்லவியைச் சில காலம் ஸ்ரீ சத்திய மூர்த்தி தமது பிரசங்கங்களில் கையாண்டு கேட்கும் ஜனங்களைப் பைத்தியமாக அடித்துவந்தார். இந்த தேசத்தில் இங்கிலீஷ்காரர்கள் அனுபவிக்கும் தனி உரிமைகளையும் சலுகைகளையும் ஒவ்வொன்ருக எடுத்துச் சொல்லி மேற்படி பல்லவியுடன் முடிப்பார். உதாரணம்:—

"ஒரு உத்தியோகத்தை ஆங்கிலேயன் பார்த்தால் அவனுக்கு இரண்டாயிரம் ரூபாய் சம்பளம்; அதே உத்தியோகத்தை நான் பார்த்தால் எனக்கு எண்ணூறு ரூபாய்தான் சம்பளம். இந்த வித்தியாசம் எதனுல் தெரியுமா? அவன் தோல் வெளுப்பாம்! என் தோல் கறுப்பாம்! ..."

இப்படியாக உதாரணங்களை அடுக்கிக் கொண்டே போவார். பிரசங்கத்தில் ஜனங்களின் மனதைக் கவர்ந்து அவர்களுடைய ஆவேசத்தைக் கிளப்புவதற்கு இம்மாதிரி அநேக உத்திகளை அவர் கையாள்வதுண்டு.

(தொடரும்)



தமிழ் நாட்டின் பழைய பொம்மலாட்டக் கலைக்கு மயிலை ரஸிக ரஞ்சனி சபையார் புத்துயிர் கொடுக்க முன் வந்திருக்கிருர்கள். ஹரிச்சந்திர பொம்மலாட்டம் 14-4-43ந் தேதி புது வருஷப் பிறப்பன்று மேற்படி சபையில் நடைபெறும்.



# பூந்தோட்டம்

ஆசிரியர்
ரவீந்திர நாத் டாகூர்
மொழிபெயர்ப்பு
த. நா. குமாரஸ்வாமி



## இரண்டாம் அத்தியாயம்

"ரோஷ்னி!" என்று கூப்பிட்டாள் நீரஜா. ஆயா உள்ளே வந்தாள். அவள் நடு வயதினள்; தலையில் நரையும் கருமையும் கலந்த மயிர். கரடுபாய்ந்த கையில் தடித்த பித்தளைக் காப்பு. ரவிக்கைக்குமேல் ஒரு முகக்கு. தசைப்பற்றில்லாத உடம்பின் விளைவிலும் கண்டின முகத்திலும் நிலைத்ததொரு கடின பாவம். நீரஜாவை அவள்தான் வளர்த்தவள். அவளுக்கு இல்லாத அக்கறை வேறு யாருக்கு, இந்த ஸம்ஸாரத்தில்?

"கொழுந்தே, ஜலங்கொண்டு வரட்டுமா?" என்றாள் அவள்.

"வேண்டாம், உட்கார்" என்றாள் நீரஜா. ஆயா தரையில் உட்கார்ந்தாள் முழங்காலைத் தூக்கி வைத்துக்கொண்டு.

நீரஜாவுக்கு அந்தரங்கமாகப் பேசவேண்டு மென்றிருந்தது. அதனால்தான் ஆயாளைத் தேடினாள். ஆயாவும் அவளுக்கு அந்தரங்க மான மனுஷி.

"இன்றைக்கு அதிகாலையிலேயே வாசற் கதவு திறக்கும் சப்தம் கேட்டது" என்று ஆரம்பித்தாள் நீரஜா.

ஆயா பதிலே சொல்லவில்லை. ஆனால் அவளது கடுகடுத்த முக பாவத்தில் 'என்னைக் நுத்தான் கேட்கவில்லை!' என்ற பதில் எழுதி வைத்திருந்தது.

அவர் "ஸரளாவுடன் தோட்டத்தைப் பார்க்கப் போனார் போலிருக்கிறது!" என்றாள் நீரஜா.

இது நிச்சயமாகத் தெரிந்த விஷயந்தான்; ஆனால் இதே கேள்விதான் ஒவ்வொரு நாளும். ஒருதரம் கையைச் சரிப்படுத்திக் கொண்டு, கோணல் முகத்துடன் ஆயா மௌனம் சாதித்தாள். நீரஜா, வெளிப் பக்கமாக நோக்கியவாறு தனக்குத்தானே பேசிக் கொண்டாள்.

"என்னையும் இப்படித்தான் அதிகாலையில் எழுப்புவார்; நானும் அவருடன் தோட்டத்தைக் கவனிக்கப் போவேன், இதே வேளையில் ...... ரொம்ப நாள் கதை யன்று."

இவ்வாறு நெஞ்சுடன் பேசிக் கொண்ட போது பிறர் யாரும் அதில் சேர்ந்துகொள்ள வேண்டுமென்று அவள் எதிர்பார்க்கவில்லை. ஆனாலும் ஆயாவால் சும்மா இருக்க முடிய வில்லை. "அவளைக் கூடவே அழைத்துக் கொண்டு போகாமற் போனால் தோட்டம் எரிந்து போய்விடுமோ, என்னவோ?" என்றாள்.

நீரஜா தனக்குள்ளேயே, "நான் ஒரு நாளும் நியூ மார்க்கெட்டில் விடியும் நேரத்தில் புஷ்பங்களை விலைக்குப் போடாமல் இருக்க மாட்டேனே. அப்பேர்ப்பட்ட நேரம் இன்று போய் விட்டது. வண்டி வரும் சப்தம் கேட்கிறதே. இப்போது வியாபாரத்தை யாராக கவனித்துக் கொள்கிறார்கள், ரோஷ்னி!" என்றாள்.

தெரிந்திருக்கும் விஷயத்திற்கு யார் பதில் சொல்லுவார்கள்? ஆயா வாயை மூடிக் கொண்டிருந்தாள்.

"அது எப்படியாவது போகட்டும். நான் இருந்தவரை தோட்டக்காரர்கள் 'டிம்கி' கொடுத்தது கிடையாது" என்றாள் நீரஜா ஆயாவைப் பார்த்து.

குமுறிக்கொண்டே எழுந்தாள் ரோஷ்னி. "அப்போது இல்லைதான். இப்போது கண்ணுக் கெதிரேயே திருடுகிறார்கள். யார் கேட்பது?" என்றாள்.

"நிஜமாகவா?"

"பொய்யா சொல்லுகிறேன். புது மார்க்கெட்டிற்கு முன்போல் பூ விற்பனைக்கு எங்கே போகிறது? யஜமானர் தலை வெளியே மறைய வேண்டியதுதான், தோட்டக்காரர்கள்

பாடு கொண்டாட்டம். வாசலிலேயே பூவைக் கூறு கட்டி விற்றுவிடுகிறார்கள்."

"இதை யாருமே கவனிப்பதில்லையா?"

"யாருக்கம்மா அவ்வளவு அக்கறை?"

"இப்படிக் கொள்ளை போகிறது என்று யஜமானியிடம் நீதான் சொல்லக்கூடாதா, என்ன?"

"நான் யாரம்மா சொல்வதற்கு? பிழைக்க வந்தவள் நான். மரியாதையோடு ஓர் அளவில் நிற்கவேண்டாமா? நீ தான் சொல்லுகிறதுதானே? உனக்குத் தானே எல்லாம் சொந்தம்?"

"சரி, சரி, இருக்கட்டும், இந்த மாதிரி நடந்து கொண்டிருக்கட்டும்; வியாபாரம் குட்டிச்சுவரானால் எல்லாம் தானாகவே தெரிந்து போகிறது! இதையெல்லாம் சொல்ல ஒரு நாள் வராமல் போகாது. அன்னையின் ஆதரவை விட மாற்றாந்தாயின் ஆசை உயர்வானதன்று. வாயை மூடிக் கொண்டு இரு."

"கொழுந்தே! இன்னொரு விஷயமும் சொல்லிவிடுகிறேன். அந்த ஹலா இருக்கிறானே, அவன் முன்போல் சரியாக வேலை செய்வதில்லை" என்றாள் ரோஷ்னி.

ஹலா, வேலையில் காட்டும் அசிரத்தை ஒன்று மட்டுமே ரோஷ்னியின் எரிச்சலுக்குக் காரணமன்று. அவனிடத்தில் நீரஜா சமய சந்தர்ப்பம் பார்க்காமல் அதிக விசுவாசம் காட்டி வந்ததே முக்கியமாக அவளை உறுத்தியது போலும்!

"அவன் பேரில் குறை கூறாதே! வந்திருக்கிறாளே புதிய யஜமானி, அவளைக் கண்டால் அவனுக்குப் பிடிக்கவில்லையோ என்னவோ? தலைமுறை தலைமுறையாக அவன் குடும்பம் தோட்ட வேலை பார்த்து வருகிறது. உங்கள் ஸரளா படித்து இருந்தால் மட்டும் என்ன? கட்டளை இட்டுவிட்டால் அவன் அடங்கிச் செய்து விடுவானா? புதிய கட்டுத் திட்டங்கள் ஹலாவுக்குச் சரிப்படவில்லை. என்னிடங்கூட முறையிட்டுக் கொண்டான். 'காதிலேயே போட்டுக் கொள்ளாதே. வாயைத் திறவாமல் உன் இஷ்டப்படியே வேலை செய்' என்று சொல்லி விட்டேன்."

"அன்று ஒரு நாள், யஜமானர், அவனை வேலையை விட்டு நீக்கிவிடப் போனார் தெரியுமோ?"

"ஏன், எதற்காக?"

"பீடி பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தானாம். வெளியிலிருந்து ஏதோ மாடு வந்து அவன் கண்ணெதிரிலேயே செடியையெல்லாம் மேய்ந்து கொண்டிருந்ததாம். அவன் அதை அதட்டித் துரத்தவே இல்லை. யஜமானர் நேரே பார்த்துவிட்டு, 'ஏண்டா! மாட்டை ஓட்டாமல் குந்திக் கொண்டிருக்கிறாயே?' என்று கேட்டதற்கு, அவன் பளிச்சென்று, 'என்னால் அதைத் துரத்தமுடியுமா, ஸாமி? மாடு என்னை துரத்திக்கொண்டு வருகிறதே... எனக்கு மட்டும் பயம் இராதா? உயிர் போய் விட்டால்?' என்றானாம்."

இந்த சமாசாரத்தைக் கேட்டதும் நீரஜா நகைத்தாள். "அவன் பேசுகிற தோரணையே அப்படி. அது எப்படி இருந்தாலும் அவனுக்கு இவ்வளவு தூரம் இடம் கொடுத்தவள் நான்தான்" என்றாள்.

"யஜமானர், உங்களுக்காகவே அவனை அன்று அதோடு விட்டார். உள்ளே மாடு தான் வரட்டும்; காண்டா மிருகமேதான் வரட்டும்! இப்படியா பதில் சொல்லுகிறது? வேலைக்காரனாக இருக்கும் அவனுக்கு வாய் அதிகந்தான், அம்மா!"

"வாயை மூடு, ரோஷ்னி! அவனுக்கு என்ன வருத்தமோ, உனக்கென்ன தெரியும்? அதனால்தான் மாட்டை ஓட்டவில்லையாக்கும். அவனுக்கு என்ன கொதிப்போ உள்ளுக்குள்ளே? அதோ ஹலா தலைமேல் துணியைப் போட்டுக் கொண்டு போகிறானே! அவனைக் கூப்பிடு இங்கே!"

ஆயா கூப்பிட்டாள். ஹலதரன் உள்ளே வந்தான். நீரஜா அவனை, "என்னடா, உனக்கு இப்போது புதுசா ஏதாவது வேலை இட்டிருக்கிறார்களா?" என்று விசாரித்தாள்.

"அதை ஏன் கேட்கிறீங்க? எனக்கு அழுகை ஒரு பக்கம், சிரிப்பு ஒரு பக்கம் வருகிறதம்மா" என்றான் ஹலதரன்.

"என்ன சங்கதி, சொல்லு!"

"அதோ, எதிரே, மல்லிக் பாபுவின் பழைய வீட்டை இடிக்கிறார்கள். அங்கிருந்து செங்கல் துண்டுகளைக் கொண்டு வந்து மரத்தடியில் அடுக்க வேண்டுமென்று ஸரளா அம்மா உத்தரவிட்டார். வெயில் வேளையில் கல்லின் உஷ்ணம் செடிகளுக்கு உறைக்குமே என்று சொன்னேன். என் வார்த்தையை அவர் காதிலேயே போட்டுக் கொள்ளவில்லை."

"ஐயாவிடம் சொன்னாயோ?"

"ஐயாவிடமும் சொன்னேன். என்னை அவர் அதட்டி, 'சொல்லுகிறதைச் செய்யேன்' என்றார். எனக்கு இந்த வேலை வேண்டாம், அம்மணி!"

மென்று கேளேன். இந்தா இரண்டு ரூபாய். இங்கே பஞ்சப் பாட்டுப் பாடாதே, போ" என்று முக்காலி மேலிருந்த பித்தளைப் பேழையிலிருந்து ரூபாயை வெளியே எடுத்துக் கொடுத்தாள். அதையும் வாங்கிக்



"யார் உன்னை இதையெல்லாம் கொண்டு வரச் சொன்னார்கள்?"

"அப்படியா சங்கதி? கடைசியில் குப்பை ம்மா உன்னை எடுத்து வர ஏவினாள், ஹராஜி!"

"அம்மா, நீங்கள் அடியுங்கள், நான் பட்டுக் ள்கிறேன். இந்த மாதிரி வேலையில் ன் இறங்கினால் எங்கள் ஜாதியார் என்னைப் ற்றி என்ன நினைப்பார்கள்? இதற்காக ாதியை விட்டும் தள்ளி விடுவார்களே! நான் லி ஆனா என்ன?"

"சரிதான், போடா. இன்னொருதரம் ங்கள் யஜமானி இந்த மாதிரி வேலை ட்டால் செய்யாதே. தைரியமாக, 'அம்மா சய்ய வேண்டாமென்று சொன்னாங்கோ' ன்று சொல்லு."

ஹலா போகாமல் நின்று கொண்டிருக் லே "என்டா, நின்று கொண்டிருக்கிறாய்?" ன்று கேட்டான்.

"ஊரிலிருந்து காகிதம் வந்திருக்குதம்மா; ங்க வீட்டிலே நல்ல உழவு மாடு ஒன்று சத்துப் போய்விட்டதாம்" என்று தலையைச் சாறிந்து கொண்டே நின்றான் ஹலா.

"மாடும் சாகவில்லை! மனுஷ்யனும் சாக ல்லை. ரூபாய் தேவையாயிருந்தால் வேண்டு கொண்டு அவன் பேசாமல் தயங்கித் தயங்கி நின்றான்.

"இன்னும் என்னடா?"

"வீட்டுக்காரிக்குக் கட்டிக்கொள்ளப் புடைவையே சுத்தமாக இல்லே, தாயே. ஏதாவது பழசு கிழசு ...... ரொம்பப் புண்ணியமாயிருக்கும்" என்று வெற்றிலைக் காவி படிந்த தன் பல் வரிசையைக் காட்டி இளித்தான்.

"ரோஷ்னி! அதோ கொடியில் போட்டிருக்கிறேனே, அந்தப் புடைவையை இழுத்து அவனிடம் கொடு" என்றான் நீரஜா.

ரோஷ்னி தலையை ஆட்டிக் கொண்டே, "அதையா கொடுக்கச் சொல்றே? அது உன்னுடைய டக்காச் சேலையாயிற்றே!" என்றான்.

"இருந்தால் என்ன? என் வரைக்கும் எந்தச் சேலையும் இந்த சமயம் ஒரே ஸமானத் தான். இதையெல்லாம் நான் எப்போது உடுத்தப் போகிறேனோ?"

ரோஷ்னி முகத்தைச் சுளித்தவாறு, "வேண்டாம், வேண்டாம்; அந்தச் சிவப்புக் கரைபோட்ட 'மில்' புடைவையைக் கொடுத்தால் போகிறது. ஹலா! இந்தமாதிரியெல்லாம், அம்மாளை நீ தொந்தரவு படுத்துவதா

யிருந்தால், அப்புறம் நான் ஐயாவிடம் சொல்லி உன்னைத் தூக்குகிற வழியைப் பார்ப்பேன். ஆமாம்!" என்றாள்.

ஹலதான் நீரஜாவின் காலடியில் விழுந்து, அழுகிற குரலில், "என் காலம் முடிந்து விட்டதம்மா" என்றான்.

"என்னடா உனக்கு?"

"ஆயாளை நான் சிற்றம்மையாக நினைத்துக் கொண்டிருந்தேன். எனக்கு அம்மா இல்லை. துரதிர்ஷ்டம் பிடித்த இந்த ஹலா விடத்தில் ஆயாளுக்கு அன்பு உண்டென்று இதுவரை எண்ணி வந்தேன். இன்று பாருங்கள்.........நீங்கள் பெரிய மனசு பண்ணித் தருவதைக் கூட இவங்க தடுத்துவிடுகிறாங்களே! யார்மேலும் பிசகில்லை......என் தலை எழுத்து, அம்மா, என் தலை எழுத்து! இல்லாது போனால் உங்களுடைய ஹலாவை வயிற்றெரிச்சல் கொட்டிக் கொள்ள இப்படிப் பிறர் கையில் ஒப்பித்துவிட்டு, நீங்கள் படுக்கையாகக் கிடப்பீங்களா?"

"பயப்படாதேடா, உன் சிற்றம்மை உன் பேரில் ஆசையாகத்தான் இருக்கிறாள். நீ வருவதற்குச் சற்றுமுன்புதான் உன்னை மிகவும் புகழ்ந்தாள். ரோஷ்னி, அந்தச் சேலையை அவனிடம் போடு! இல்லா விட்டால், அவன் இங்கேயே விழுந்து கிடப்பான்."

விரஸம் தோய்ந்த முகத்துடன், ஆயாள், டக்காச் சேலையை அவன் எதிரே வீசி எறிந்தாள். அதைப் பெற்றுக் கொண்டு, ஹலா தொப்பென்று விழுந்து நமஸ்காரம் செய்தான். பிறகு எழுந்து நின்று, "அம்மணி, ஏதாவது ஒரு சவுக்கத்திலே இதைக் கொடுங்கள். என் கை அழுக்காய் இருக்குது" என்று சொல்லி, நீரஜாவின் சம்மதத்தைக் கூட எதிர்பாராமல், கொடியிலிருந்து ஒரு துவாலையை எடுத்துச் சேலையை அதில் சுருட்டி வைத்துக்கொண்டு நடையைக் கட்டினான்.

"ஆயா! பாபு வெளியே போய்விட்டாரா? உனக்கு நிச்சயமாகத் தெரியுமா?" என்று ரோஷ்னியைக் கேட்டாள் நீரஜா.

"நானே பார்த்தேனம்மா; என்ன அவசரமாகப் போனார் தெரியுமோ! தொப்பியைக் கூட மறந்துவிட்டார்."

"இருக்கட்டும், இது முதல் தடவை. காலையில் எழுந்ததுமே எனக்குப் புஷ்பங்களை அனுப்பி விட்டுத்தான் அவர் மறு வேலை பார்ப்பார்......இன்று அது எனக்குக் கிடைக்காது. ஒவ்வொரு நாளும் எனக்கு ஏமாற்றந்தான்! கடைசியில் என் இடம் குப்பைப்



தோட்டக்காரன் ஹலா.

பள்ளத்திலே தான் — எரிந்து சாம்பலாகி இருக்கும் கரிக்குவியல்தான்!"

ஸரளா அங்கே வருவதைப் பார்த்து ஆயா முகத்தைக் கோணிக் கொண்டு அப்புறம் சென்றாள்.

ஸரளா உள்ளே நுழைந்தாள். அவள் கையில் 'ஆர்கிட்' (Orchid) புஷ்பத்தி கொத்து இருந்தது. தூய வெண்மையா மலர். புறவிதழில் மட்டும் லேசான ஊதா கோடுகள். இறகு விரித்த ஒருவகை வண்ணாத்திப் பூச்சியைப் போலவே இருந்தது. ஸரளா ஒல்லியாக இருந்தாள். கொஞ்சம் உயரம் தான். நல்ல மாநிறம். அவளுடைய பெரி கண்கள் முக்கியமாக எல்லோரையு கவர்ந்தன. பிரகாசமும் கருணையும் கலந்த பார்வை. மொட்டாவான கதர் 'ஸாரி' உடுத்திருந்தாள். அசட்டையாக வாரி முடிந்த கூந்தல். அதன் இரண்டொரு கற்றை காதில் படிந்திருந்தது. அலங்காரம் ஒன்றுமே இன்றி உடம்பிலே பொங்கி வரு இளமையை அவள் அலக்ஷ்யமாக ஏற்று கொண்டிருந்தாள்.

நீரஜா அவளை நேரே நோக்கவே இல்லை. ஸரளா, மெதுவாகப் பூவைப் படுக்கையி முன்னால் வைத்தாள்.

நீரஜா, தனக்குண்டான எரிச்சலை மறைத்துக் கொள்ளாமலே, "யார் உன்னை இவையெல்லாம் கொண்டு வரச் சொன்னார்கள்?" என்றாள்.

(தொடரு

# கம்பர் தரும் காட்சி

[ டி. கே. சிதம்பரநாத முதலியார் ]

## 42. எங்கே போகிற தேர்?

சீதையை அயோத்தியிலேயே இருக்கச் செய்து விட வேண்டும் என்று ராமன் எவ்வளவோ முயன்றான். சீதையிடம் அது பலிக்கவில்லை. அவளும் காட்டுக்குப் புறப்பட்டு விட்டாள்.

அரண்மனை வாயிலை விட்டுத் தெருவுக்கு ராமன் வந்தான். அவ்வளவுதான். அங்கு நின்ற ஜனங்கள் குறுக்கும் நெடுக்குமாகத் தெருவில் விழுந்தார்கள். அப்படியே கிடக்கிறார்கள். அப்பாவி ராமன் என்ன செய்வான்? வெற்றிடமிருக்கிறதா என்று பார்த்துப் பார்த்துக் கால் எடுத்து வைத்து, மெள்ள நடந்து, அந்த ஜனங்களைக் கடக்கிறான். சீதையும் லக்ஷ்மணனும் பின்னாலே வந்து சேர்ந்து கொள்ளுகிறார்கள்.

வீதியில் நடக்க வசதி கிடைத்தவுடன் எப்படிப் போகிறார்கள் பார்க்கலாம்.

எப்போதும் பட்டாடை அணிந்த மனைவியாகிய சீதை மரவுரியைச் சுற்றிக் கொண்டு பின்னாலே வருகிறாள். முன்னாலே கையில் வில் ஏந்திக்கொண்டு தம்பி லக்ஷ்மணன் போகிறான், உயிருக்குயிரான நம்முடைய ராமன் மத்தியில் நடந்து போகிறான். எப்படியிருக்கிறது ராஜாதி ராஜனான சக்கரவர்த்தித் திருமகனது காரியம்!

சீரை சுற்றித்
 திருமகள் பின்செல,

மூரி வில்கை
 இளையவன் முன்செலக்,

காரை ஒத்தவன்
 போம்படி கண்டஅவ்

ஊரை உற்றது
 உணர்த்தவும் ஒண்ணுமோ?

[சீரை சுற்றி: மரவுரியைச் சுற்றிக் கொண்டு; திருமகள் பின் செல: லக்ஷ்மி தேவியே என்று சொல்லும்படியான சீதை பின்னே செல; மூரிவில்கை இளையவன் முன் செல: பலமாகக் கட்டமைந்த வில்லைக் கையில் ஏந்தியவனும் லக்ஷ்மணன் முன்னே செல்ல; காரை ஒத்தவன் போம்படி: நீலமேக வர்ணனான ராமன் போகும்படி; கண்ட அவ் ஊரை உற்றது உணர்த்தவும் ஒண்ணுமோ: பார்க்கும்படி துர் அதிர்ஷ்டம் ஏற்பட்ட அந்த ஊரார்க்கு உண்டான துன்பத்தை எடுத்துச் சொல்லவும் முடியுமோ?]

ஜனங்கள் எவ்வளவோ அழுதார்கள்; அலறினார்கள். சிறிது நேரம் செல்லவே அவர்களுடைய மனப்பாங்கு வேறாய்ப் போய் விட்டது. எப்படி என்று பார்ப்போம்.

ஆரும் பின்னர்
 அழு(து)அவ வித்திலர்;

சோரும் சிந்தையர்
 யாவரும் சூழ்ந்தனர்;

'வீரன் முன்வனம்
 மேவுதும் யாம்' எனாப்

போர்என்(று) ஒல்ஒலி
 கைம்மிகப் போயினார்.

[அவவித்திலர்: நொந்து கொள்ளவில்லை; சோரும் சிந்தையர் யாவரும் சூழ்ந்தனர்: மனசு தள்ளாடுகிற காரியந்தான், ஆனாலும் எல்லாரும் சூழ்ந்து நிற்கிறார்கள்; நின்று ஒரு உறுதிக்கு வருகிறார்கள்; எனா: என்று. சொல்லவும்; போர் என்று] ஒல் ஒலி: பெருங் கூட்டத்திலிருந்து வரும் பெரிய இரைச்சலைப் "போர்" என்று சொல்வது அந்தக் காலத்து வழக்கு; கைம்மிக: ரொம்ப அதிகமாகக் கேட்க.]

போகிற வழியில் தசரதனது அரண்மனை வாசல் இருந்தது. அங்கே

தாய்மார் வந்து நின்றார்கள். அவர்களை வணங்கினான் ராமன்.

தாதை வாயில்
  குறுகினன் சார்தலும்,
கோதை வேலவன்
  தாயரைக் கும்பிடா,
'ஆதி மன்னனை
  ஆற்றுமின் நீர்' என்றான்;—
மாத ராரும்
  விழுந்து மயங்கினார்.

[தாதை வாயில் குறுகினன் சார்தலும்: தாதை சக்கரவர்த்தியின் அரண்மனை வாசலை நெருங்கிப் போனபோது; கோதை வேலவன்: வெற்றியைக் கொண்டாடுகிற விழாக்களில் வில்லுக்கு மாலை கட்டி அலங்காரம் பண்ணுவார்கள்; அந்தகைய வில்லை ஏந்தி நிற்பவன் ராமன்; தாயரைக் கும்பிடா: தாய்மார் அங்கு வந்து நிற்க அவர்களைக் கும்பிட்டு என்ன சொல்லுகிறான்; ஆதி மன்னனை ஆற்றுமின் நீர் என்றான்: தலைமுறை தலைமுறையாக ஆண்டு வரும் சக்கரவர்த்தியை ஆறுதலடையச்செய்யுங்கள் நீங்கள் என்றான்.]

விழுந்து மயங்கிக் கிடந்தவர்கள் அப்படியே கிடக்கவா முடியும்? ராமனையும் சீதையையும் புகழ்ந்தார்கள். காவலாய்ப் போகிற லக்ஷ்மணனைப் பார்த்து ஒரு குறையும் உனக்கு வராதப்பா என்று வாழ்த்தினார்கள். அவர்களுக்கு உவந்த தெய்வங்களை எண்ணிப் பிரார்த்திக்கிறார்கள்.

ஏத்தி னார்தம்
  மகனை மருகியை;
வாழ்த்தி னார்இளை
  யோனை; வழுத்தினார்,
'காத்து நல்குமின்
  தெய்வதங் காள்' என;—
நாத்த ழும்ப
  அரற்றிந டுங்குவார்.

[ஏத்தினார்: புகழ்ந்தார்கள். வழுத்தினார்: பிரார்த்தனை செய்தார்கள்; என: என்று.]

மிகுந்த சிரமத்தின்மேல் தாய்மாரை விட்டுக் கடந்து போனான் ராமன்.

அடுத்தாற்போல் நிற்பது யார்? வாய் பேச முடியாத நிலையில் நிற்கிறார் வசிஷ்டர். அவரை அப்படியே கை கூப்பித் தொழுது விட்டுத் தேரில் ஏறிக் கொள்கிறான்.

அன்ன தாயர்
  அரிதில் பிரிந்தபின்,
முன்னர் நின்ற
  முனிவனைக் கைதொழா,—
தன்ன(து) ஆருயிர்த்
  தம்பியும் தாமரைப்
பொன்னும் தானும்,ஓர்
  தேர்மிசைப் போயினான்.

[தாமரைப் பொன்னும்: தாமரை மலரிலிருக்கும் லக்ஷ்மியோடு; சீதை தேரிலிருப்பது அவ்வளவு அழகிய காட்சி!]

உடன் வரும் லக்ஷ்மணனையும் சீதையையும் பற்றி யோசிக்கிறான் ராமன். மனம் சரியான நிலைமையில் இல்லை, ரொம்பவும் மயங்குகிறது. பிறகு தெளிகிறது. தெளியும்போது தானும் தேரிலிருப்பதாக உணருகிறான். இந்த உணர்ச்சியைக் குறித்து நிற்கிறது 'நானும்' என்ற வார்த்தை.

---

## பழக்கம் காரணம்!



உபாத்தியாயர்:— ராமு, எனக்கு மாத்திரம் எப்படியடா 'வட்டம்' சரியாய் வருகிறது?

ராமு:— உங்களுக்குப் பரீக்ஷைப் பேப்பர் திருத்தித் திருத்திப் பழக்கம், ஸார்!




★ குற்றால ஸ்நானத்தின் குளிர்ச்சியைத் தரும் ★

★ டி. எஸ். ஆர். & கோ ★

வாசனை திரவிய வியாபாரிகள், கும்பகோணம்

மதராஸ் ஸிடி ஏஜெண்டுகள் :

**புஷ்பவனம் ஸ்டோர்ஸ், பைக்ராப்ட்ஸ்ரோடு, திருவல்லிக்கேணி**

ஸ்டாகிஸ்டுகள் :

| சுவாமிநாதய்யர் அண்டு சன்ஸ்., புதுக்கோட்டை | சாரதா ஸ்டோர்ஸ் காரைக்குடி | மெஸர்ஸ். சண்டிகா அண்டுகோ. முதல் அக்ரஹாரம், சேலம் |
|---|---|---|

தொடர்கதை

# உடைந்த வளையல்

து. ரா.

## நான்காம் அத்தியாயம்

சமையல்காரனை அந்த மாதத்துடன் நின்றுவிடும்படி கூறிவிட்டதாகச் சுசிலா சொன்னதைக் கேட்டபோது தங்கமணிக்கும் ஆச்சரியம் உண்டாயிற்று.

தங்கமணி அப்பொழுதுதான் ஆபீஸிலிருந்து வந்திருந்தான். உடையை மாற்றிக் கொண்டே சுசிலாவைப் பார்த்து, "இன்றைக்கு வெயில் தாங்க முடியவே இல்லை. அப்பா! இந்த வருஷம் கோடை ரொம்ப மோசமாய் இருக்கும் போலிருக்கிறது. நாக்கை வரட்டுகிறது. கொஞ்சம் மோர் இருந்தால் கொடு" என்றான்.

சுசிலா ஒரு வெள்ளி டம்ளரில் மோரைக் கொண்டு வந்து கொடுத்து விட்டு, "அப்பாவிடமிருந்து இன்றைக்கும் கடிதம் வந்தது. நான் சாமாவை இந்த மாசத்தோடு நின்று போகும்படி சொல்லிவிட்டேன்" என்றாள்.

தங்கமணி ஆச்சரியத்துடன், "சாமாவை நின்றுபோகச் சொல்லி விட்டாயா? ஏன், சாமாவுக்கு என்ன?" என்று கேட்டான்.

"அப்பா ஊரிலிருந்து சமையலுக்கு ஒரு பெண்ணை அழைத்து வருகிறேன் என்று எழுதி யிருக்கிறார். பொம்மனாட்டிகள் யாரும் அகப்படவில்லை என்றுதானே சாமாவை வைத்துக் கொண்டோம்? பொம்மனாட்டி அகப்படுகிறபோது அவன் என்னத்துக்கு?"

"அது சரிதான். சமையல்காரியை எங்கே பிடித்தார் உங்க அப்பா?"

"அவள் சமையல்காரி இல்லையாம்; பாவம், யாரோ ஏழைப் பெண்ணாம். அப்பா கதையாக எழுதி யிருக்கிறார் அவளைப் பற்றி. ரொம்ப சின்னப் பெண்ணாம். அவள் அகமுடையான் ரயில்வே ஸ்டேஷனில் புக்கிங் கிளார்க்கா யிருந்தானாம். ஒரு நாள் ராத்திரி புக்கிங் ஆபீஸில் இருந்து எதிரே யிருந்த வீட்டிற்குப் போவதற்காக லயனைத் தாண்டுகிறபோது கூட்ஸ் வண்டியிலே மாட்டிக் கொண்டு செத்துப் போய்விட்டானாம். பாவம், இந்தப் பெண்ணுக்கு வேறே நாதி கிடையாதாம். ரொம்ப நல்ல பெண் என்று அப்பா எழுதி யிருக்கிறார்."

தங்கமணி அவள் கொடுத்த கடிதத்தைப் படித்துவிட்டு, "உனக்குச் சமையல்காரி வரப் போகிறதாகச் சொன்னாயே? உன் அப்பா உனக்கு ஒரு தங்கையை அழைத்து வருகிறதாக அல்லவா எழுதி யிருக்கிறார்?" என்று சிரித்துக்கொண்டே கேட்டான்.

"ஆமாம்; பாவம், அப்பாவுக்கு ரொம்ப இரக்கம் ஜாஸ்தி. அந்தப் பெண்ணின் கஷ்டத்தைப் பார்த்து அவர் மனசு கேட்கவில்லை. நீங்களே சொல்லுங்கள், அம்மாவும் அப்பாவும் இல்லாமல், திடீரென்று புருஷனும் போய்விட்டால் ஒரு சின்னப் பெண் என்ன பண்ணுவாள் பாவம்! நினைச்சாலே கண்றாவியா யிருக்கிறது இல்லையா?"

தங்கமணி "உம்—" என்று சொல்லி விட்டுத் தலையைச் சொறிந்து கொண்டான். "உங்கப்பாவைச் சொல்லு! ஊரார் கஷ்டத்தை யெல்லாம் விலை கொடுத்து வாங்கிக்கொள்வாரே அவர்! இப்போ உனக்கு ஒரு தங்கை தேடிப் பிடித்திருக்கிறாராக்கும்?"

"ஏன்; எனக்குக் கூடமாட ஒத்தாசை செய்து கொண்டு தங்கையைப் போல் தான் இருக்கட்டுமே. கேட்கிறவர்களிடமும் என் தங்கை என்று சொல்லிக் கொண்டால் போகிறது. அவள் பெயர் கூட நன்றாய்த்தான் இருக்கிறது. மதுரமாம்!"

"மதுரமா?" என்றான் தங்கமணி. "பெயர் மதுரமாய்த்தான் இருக்கிறது. உருவத்தில் சூர்ப்பனகையாய் இல்லாமல் இருக்கவேண்டும்!" பிறகு சாமாவை நினைத்துக்கொண்டு அவன், "சாமாவிடம் என்ன சொன்னாய்? பாவம் உடனே வேறே எங்கேயாவது வேலை கிடைக்கவேண்டுமே அவனுக்கு?" என்றான்.

சுசிலா, "அதுக்கென்ன; சமையல்காரனுக்கா வேலை அகப்படாமல்

போகிறது? சமையல்காரன் வேண்டியவர்கள்தான் சமையல்காரன் கிடைக்காமல் திண்டாடுகிறார்கள். அடேடயப்பா! சமையல்காரனுக்கு இருக்கிற கிராக்கி வேறு யாருக்கு இருக்கிறது? அம்புலுவாத்துக்கு ஒரு கிழவன் வந்தானே, அவன் என்ன பண்ணினான் தெரியுமா? அவா ஆத்திலே எல்லாரும் டீ தான் சாப்பிடுவா. 'எனக்கு டீ பிடிக்காது, காப்பிதான் நான் சாப்பிடுவேன்' என்று சொன்னானும். 'உனக்கு டீ பிடிக்காவிட்டால் ஹோட்டலிலே போய்க் காப்பி சாப்பிடு. காசு தருகிறேன்' என்று அம்புலு சொன்னாளாம். 'ஹோட்டல் காப்பி நன்றாயில்லை. நானே தான் போட்டுக்கணும்' என்றானும் அவன். அம்புலு முடியாதென்றதும் மேல் துண்டை உதறிப் போட்டுக்கொண்டு விடு விடென்று போய் விட்டானும்" என்றாள்.

அப்பொழுது பட்டு அங்கே வந்தாள். சுசீலாவின் பேச்சைப் பாதி கேட்டுக்கொண்டே வந்தாளாதலால், "ஏன் சித்தி, சாமாவை நிறுத்தி விட்டாயாமே; ஏன்?" என்று கேட்டாள்.

"ஆமாம். அவனுக்குப் பதில் ஒரு சமையல்காரி வைத்துக் கொள்ளப் போகிறேன்."

"இல்லை பட்டு, சுசீலா பொய் சொல்கிறாள். சமையல்காரி யாரும் வரப் போகிறதில்லை. சுசீலாவுக்கு ஒத்தாசைக்கு அவன் தங்கை ஊரிலிருந்து வருகிறாள்" என்றாள் தங்கமணி.

ஊரிலிருந்து வருகிறவளின் கதையைக் கேட்டதும் பட்டுவும் இரக்கப்பட்டாள். "எங்கள் பள்ளிக்கூடத்திலேயும் இப்படித்தான் ஒரு டீச்சர் இருக்காள். அவளுக்கும் கல்யாணம் ஆகி ஆறு மாசத்துக்கெல்லாம் ஆம்படையான் செத்துப் போய் விட்டானாம். ஆனால் அவளுக்கு அப்பாவும் அம்மாவும் இருக்கா. அவா அப்புறம் அவளைப் படிக்க வைத்தாளாம். இப்பொழுது அவளுக்கு 30 ரூபாய் சம்பளம்" என்றாள்.

"பாவம், ஸ்திரீகள் பாடுதான் எப்பொழுதும் திண்டாட்டம். எப்பொழுதும் அவர்கள் யாரையாவது அண்டித்தானே பிழைக்க வேண்டியிருக்கிறது? கல்யாணம் ஆகிற வரையில் தாயார் தகப்பனார்; அப்புறம் புருஷன்; புருஷனை இழந்தால் பிள்ளை குட்டிகள். ஆதரிக்க இவர்கள் யாரும் இல்லாவிட்டால் அவர்கள் கதி நிர்க்கதிதானே?" என்றாள் சுசீலா.



பட்டு கேட்டாள்: "ஏன் சித்தப்பா வெள்ளைக்காரர்கள் தேசத்தி பெண்கள் எல்லாம் உத்தியோகம் பார்க்கிறார்களாமே? என் டீச்சர் சொன்ன —ஆம்படையான் செத்துப் போனாலு வேண்டாம் என்று தள்ளி விட்டாலு அவர்களுக்கு அக்கறை இல்லையா அவர்களே வேலை செய்து சம்பாதித்து கொள்வார்களாம்."

"ஏண்டி பட்டு! நீ படித்துப் பா பண்ணி விட்டு என்ன உத்தியோக பண்ணப் போகிறாய்? வக்கீலாக போகிறாயா, டாக்டராகப் போறாயா?" என்று கேட்டாள் சுசீலா.

"அதெல்லாம் இஷ்டமில்லை, சித்தி நான் நர்ஸ் வேலைதான் செய்யப் போறேன். ஆஸ்பத்திரியிலே நர்ஸ்களை பார்க்கிற போதெல்லாம் நானும் நர ஆகணும் என்று எனக்கு ஆசையா இருக்கிறது. வெள்ளை வெளேரென் உடுத்திக்கொண்டு அவர்கள் இப்ப யும் அப்படியும் போகிறதைப் பார் தாலே உடம்பு சொஸ்த மாகிவிடு இல்லையா?"

தங்கமணியும் சுசீலாவும் சிரி தார்கள்.



"அப்படியென்றால் நீ கல்யாணமே
ண்ணிக்க மாட்டாயா என்ன? நர்ஸா
ப் போனால் நான் முழுதும் ஆஸ்பத்
ரியிலேயே இருந்தாகணுமே. உன்
ப்பாவும் அம்மாவும் விடுவாளா
ன்னே? அம்மா என்ன சொல்கிறாள்?"

"அம்மா சமாசாரம்தான் உனக்குத்
தெரியுமே சித்தி!" என்றாள் பட்டு.

"ஏன்? அதென்ன அம்மா சமா
ரம்?" என்று தங்கமணி கேட்டாள்.

"என்னைப் பள்ளிக்கூடம் அனுப்பவே
ம்மாவுக்கு இஷ்டமில்லை. கல்யாணம்
ண்ணி விடணுமாம். அப்பாவுக்குப்
டிக்க வைக்க இஷ்டமிருந்தாலும்
வலைக்கு அனுப்ப இஷ்டமில்லை.
'பாம்மணுட்டிகள் படித்தால் வேலைக்
ப் போகணும் என்று சாஸ்திரமா
ன்ன? சுசீலா கூடத்தான் படித்திருக்
றாள். அவள் உத்தியோகம் பண்ணு
றாளா என்ன?' என்று அப்பா கேட்
றார்" என்றாள் பட்டு.

மணி ஏழு அடித்தது. "இருட்டிப்
போய்விட்டது; நான் போயிட்டு வரேன்
த்தி" என்று பட்டு கிளம்பினாள்.
கிளம்பினவள், "பார்த்தாயா? வந்த
காரியத்தை மறந்தே போய்விட்டேன்!
நாளைக்கு வருஷப் பிறப்பாம். உங்கள்
இரண்டு பேரையும் நாளைக்கு ஆத்துக்கு
வரச் சொன்னா. இங்கே தனியாய் ஒன்
றும் பண்ண வேண்டாமாம்" என்று
கூறி விட்டுச் சென்றாள்.

"பட்டு ரொம்ப சமத்து. அவளுக்குத்
தகுந்த ஆம்படையானாய் வர வேண்டும்.
எவன் கொடுத்து வைத்திருக்கிறானோ!"
என்று சுசீலா தனக்குள் சொல்லிக்
கொண்டாள்.

## ஐந்தாம் அத்தியாயம்

நாராயணய்யர் வீட்டில் வருஷா வருஷம் வருஷப் பிறப்பை விமரிசையாகக் கொண்டாடுவார்கள். சாந்தி நகரிலுள்ள வீடுகளில் அவர்கள் வீட்டில் மட்டும்தான் வருஷப் பிறப்புக் கென்று ஊரைக் கூட்டுகிற வழக்கம்.

மத்தியானம் இரண்டு மணிக்கு, கடுமையான வெயிலில், மேல் துணியைத் தலையில் போட்டுக்கொண்டு எல்லாருக்கும் முன்னால் வழக்கம்போல் கணபதி சாஸ்திரிகள் வந்து சேர்ந்தார். நாள் கிழமைகளுக்கு, இரண்டரை மைல் தூரத்திலிருந்த கிராமத்திலிருந்து தான் அந்த ஊருக்கு சாஸ்திரிகள் வந்தாகவேண்டும். இந்த தூரம் கணபதி சாஸ்திரிகளுக்கு ஒரு பொருட்டல்ல. இரண்டணா தக்ஷிணை கிடைக்கிறதென்றால் இருபது மைலானாலும் அவர் நடப்பதற்குத் தயார். மண்டை வெடிக்கிற வெயிலாயிருந்தாலும் சரி, கொட்டுகிற மழையும் புயல் காற்றுமாயிருந்தாலும் சரி, வேஷ்டியை வரிந்து கட்டிக்கொண்டு, மலை போன்ற தம் சரீரத்தைத் தூக்கிக்கொண்டு அவர் லொங்கு லொங்கு என்று ஓடும் காட்சியைக் கண்டு அனுபவித்திருந்த சாந்தி நகர் வாசிகள் அவருக்கு 'போட் மெயில் சாஸ்திரி' என்று பெயர் கொடுத்திருந்தார்கள்.

சாஸ்திரிகள் வந்ததும் உள்ளே சென்று நாராயணய்யரை விசாரித்து விட்டு, ராஜம்மாளிடம் சென்று அவளுக்கு அடிக்கடி வரும் மயக்கம், மார்வலி எல்லாம் எப்படி இருக்கிறது என்று கேட்டபின், மேல் வேஷ்டியினால் உடம்பை விசிறிக்கொண்டே வாசல் திண்ணையில் வந்து, "அப்பாடா! என்ன வெயில், என்ன வெயில்!" என்று சொல்லிக் கொண்டு உட்கார்ந்தார். பிறகு மணி ஒவ்வொரு வீடாய்ச் சென்று, "பூஜை நடக்கப் போகிறது. சாஸ்திரிகள் வந்துவிட்டார்; வாங்கோ"

என்று அழைக்கவே, ஒவ்வொருவராய் நாராயணய்யர் அகத்துக்கு வந்தார்கள். முதலில், திண்ணையில் சாஸ்திரிகளைச் சுற்றி ஒரு 'கமிட்டி' கூடிற்று.

வந்ததும் வராததுமாய்ப் பஞ்சாக்ஷரமய்யர், "எந்தக் கடையில் வாங்கினேள் சாஸ்திரிகளே?" என்று கேட்டுக் கொண்டே சாஸ்திரிகளின் இடுப்பைப் பார்த்தபடி தம் இடது கையை நீட்டினார். சாஸ்திரிகள் கொடுத்த பொடி டப்பியைத் திறந்து பொடி எடுத்துக் கொண்டு, "ஆமாம் சாஸ்திரிகளே, கங்காதீசுவரன் கோவில் உத்ஸவம். இன்றைக்கு எத்தனை நாள்?" என்று கேட்டார்.

"இன்றைக்குத் தான் பத்தாம் நாள்; கைலாசகிரி பர்வதம்" என்றார் சாஸ்திரிகள்,

"கைலாசகிரி பர்வதமா? அதென்ன சாஸ்திரிகளே, கிரி வேறே பர்வதம் வேறேயா?" என்றார், ஜாம்பவான் போல் உட்கார்ந்திருந்த கோதண்டராம அய்யர்.

எல்லாரும் சிரித்தார்கள். "வேத பாராயண கோஷ்டி உண்டோ இல்லையோ? பரவாயில்லை; வரும்படி உண்டு உமக்கு" என்றார் ஒருவர்.

"உம்; நான் அதுக்கெல்லாம் போகிறதில்லை, முதல் இரண்டு நாள் போனேன், அப்புறம் அங்கே போகிறதைவிட நாக்கைப் பிடுங்கிண்டு சாகலாம் என்று தோன்றிற்று; அதனாலே நின்னுட்டேன்" என்றார் சாஸ்திரிகள்.

"அதென்ன சாஸ்திரிகளே?"

"ஹூம், வேத பாராயணம்! இந்தக் காலத்திலேயாவது வேத பாராயணமாவது! பயமா, பக்தியா, வைதிகமா என்ன இருக்குங்கறேள்? வேத பாராயணனை யார் மதிக்கிறான்? நம்ப பாட்டுக்கு வறட்டுத் தவளை மாதிரி கத்திண்டு போகவேண்டியது; நமக்குக் கிடைக்கிறதெல்லாம் கேலிதான்."

சாஸ்திரிகள் தலையைக் குனிந்து கொண்டு முதுகின் மேல் விசிறிக் கொண்டார்.

"உம்ம பிள்ளையாண்டான் என்ன பண்றான் சாஸ்திரிகளே? படிக்க வச்சிண்டு இருந்தேளே, என்ன படிக்கிறான்?" என்று கேட்டார் ஜாம்பவான்.

"அவன் படிச்ச நாசமாப் போனான்! படிப்பெல்லாம் மூட்டை கட்டி வச்ச இரண்டு வருஷம் ஆறதே. நாலாவது பாரத்திலே மூணு வருஷம் இருந்தான். மூணாவது தடவையும் பரீக்ஷையில் கோட் அடிச்சான். என்னடான்னு கேட்டால், 'இங்கிலீஷ் வாத்தியார் பேப்பர் திருத்தி 42 மார்க் போட்டார். அப்புறம் மார்க் லிஸ்டை ஹெட்மாஸ்டர் கிட்டே கொடுக்கறபோது தவறுதலாய் 42 க்குப் பதில் 24 ன்னு போட்டுட்டார். அதனாலேதான் பெயிலாயிடுத்து'ன்னு எங்கிட்டே காது குத்தினான். நான் நிஜம்தான்னு நினைச்சண்டு அந்த ஹெட்மாஸ்டர் எதிரிலே போய் நின்னேன். முத்துக்கிருஷ்ணய்யன் தானே இப்போ ஹெட்மாஸ்டர்! அவன் கிட்டே சொன்னால் அவன், 'என்னங் காணும், உமக்கு மூளை இருக்கிறதா இல்லையா? அப்படிக் கூட ஒரு பையனைப் பெயிலாக்கி விடுவோமா?'ன்னான். கடைசியிலே எனக்கு அசட்டுப் பட்டம் கிடைச்சதுதான் மிச்சம். அதோடு பள்ளிக்கூடம் போனது போரும்னு நிறுத்தி விட்டேன். அப்புறம் தர்ப்பைக் கட்டையாவது எடுத்துண்டு கிளம்பலாம், மந்த்ராத்தைக் கத்துக்கோடான்னு முட்டிண்டேன். அதுவும் ஏறலே."

அப்பொழுது உள்ளேயிருந்து நாராயணய்யர், "வாங்கோ சாஸ்திரிகளே எல்லாரும் உள்ளே வாங்கோ" என்று கூப்பிடவே அனைவரும் எழுந்திருந்து உள்ளே சென்றார்கள்.

சாஸ்திரிகள் பூஜை பண்ணி, புது பஞ்சாங்கம் வாசித்தார். வந்திருந்தவர்களுக்கெல்லாம் விசிறியும், பானகம் நீர் மோரும், வடைப் பருப்பும் எள்ளுச் சாதமும் வழங்கினார்கள்.

சாயந்திரம் சுசீலா ராஜம்மாளிடம் சொல்லிக் கொண்டு வீட்டுக்குப் போகக் கிளம்பினாள்.

"சாப்பிட்டு விட்டுப் போகலாம் இரு. அவசரமில்லை" என்றாள் ராஜம்மாள்.

"இல்லை மன்னி; ராத்திரி சமைச்சு வைக்கும்படி சாமாவிடம் சொல்லி விட்டு வந்திருக்கேன்" என்றாள் சுசீலா.

"அதற்கென்ன, மணி ஐந்துதானே ஆகிறது? அவன் இன்னும் உலை கூட வைத்திருக்கமாட்டான். பட்டுவை அனுப்பி, 'உனக்கு மாத்திரம் சமையல் பண்ணிக்கோ, அவாள் சாப்பிட வரவில்லை' என்று சொல்லி விட்டால் போகிறது."

சுசீலா சரி என்று இருந்தாள். ஆனால் அதற்குள் சாமாவே அங்கு வந்து விட்டான். "ஊரிலே யிருந்து உங்க அப்பா வந்திருக்கா" என்று அவன் அறிவித்தான்.

சுசீலா உடனே புறப்பட்டு விட்டாள்.

(தொடரும்)

ஆந்திர தேசமெங்கும் 6-வது வாரமாக இப்போது
அமோகமாக ஓடிக் கொண்டிருக்கின்றது!

நாகையா, மாலதி, என். எஸ். கிருஷ்ணன், டி. ஏ. மதுரம்
நடிக்கும்

ரேணுகாவின்

# பாக்யலெக்ஷ்மி

( ஒப்புயர்வற்ற தெலுங்கு சமூகச் சித்திரம் )

---

## சென்னை வெலிங்டனில்
## 14-4-43 முதல் மகத்தான ஆரம்பம்

---

இரண்டாவது வாரம்

கோயமுத்தூர் : ராஜா — திருச்சி : வெலிங்டன்

**14 - 4 - 43 முதல்**

திருநெல்வேலி : ராயல் — காரைக்குடி : கிருஷ்ணு

**18 - 4 - 43 முதல்**

மதுரை — சிந்தாமணி

★

பெங்களூர் சாகர் டாக்கீஸிலும்
கூடிய சீக்கிரத்தில் ஆரம்பமாகும்

## S. I. P. ரிலீஸ்

---

பாக்யலெக்ஷ்மி படத்தின் பாடல்களை 'ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்' & 'கொலம்பியா' ரிகார்டுகளில் கேளுங்கள்

# ஸினிமா ராணி

"தூமிலன்"

ஸினிமா நட்சத்திரம் சௌந்தர்ய குமாரி ஒரு பெரிய நிலைக் கண்ணாடி முன் உட்கார்ந்து தன் அழகைப் பார்த்து வியந்து கொண்டிருந்தாள். அப்பொழுது அந்தக் குமாரி தன் தலையில் தோன்றிய ஒரு நரைமயிரைத் தள்ளிவிட்டு "ஹும்!" என்று ஒரு பெருமூச்சு விட்டாள். உடனே "ஏக்கம்" என்ற வார்த்தை அவள் வாயிலிருந்து கிளம்பிற்று.

பிறகு உதட்டைக் கடித்துக்கொண்டு கண்ணைக் கசக்கிக் கொண்டாள். "துக்கம்" என்ற வார்த்தை புறப்பட்டது.

அடுத்தாற்போல் புருவத்தை நெரித்துக்கொண்டு உதட்டை விரல்களால் தடவி விட்டுக் கொண்டாள். அதன் முடிவில் "ஆழ்ந்த யோசனை" என்று சொல்லிக் கொண்டாள்.

பிறகு அவளது வலது மூக்குத் துடித்தது. "நியாயமான கோபம்" என்று கூறினாள். இது மாதிரி தான் செய்த ஒவ்வொரு காரியத்தைப் பற்றியும் ஒவ்வொன்று சொல்லிக்கொண்டே போனாள்:—

இடது மூக்குத் துடித்தது.
"காரணமற்ற கோபம்."
மூக்கு முழுதும் துடித்தது.
"பிரமாத கோபம்."
இரண்டு காதுகளும் அகண்டன.
"தாங்க முடியாத கோபம்."
கண்ணை மூடினாள்.
"சாந்தம்."
உதடுகள் அரும்பின.
"புன்னகை."

கடைசியாக "ஹஹ்ஹஹ்ஹா" என்று வாய் விட்டுச் சிரித்துவிட்டுப் "பரம சந்தோஷம்" என்று சொல்லிக் கொண்டாள்.

அவள் வாய் விட்டுச் சிரித்த மறு நிமிடம் தவசுப் பிள்ளை தம்புசாமி தன் கையிலிருந்த அரிவாள் மணையுடன் ஓடோடியும் வந்தான்.

"என்ன அம்மா! இப்படி நீங்களே சிரித்துக் கொள்கிறீங்களே? உடம்பு சரியாயில்லையா?" என்று கவலையுடன் கேட்டான். அப்பொழுது அவன் கவலையே உருவாய் இருந்தான். அதைச் சௌந்தர்ய குமாரி கவனித்தாள்.

"உடம்பும் இல்லை. ஒன்றுமில்லை. நான் முக பாவம் பயிற்சி செய்து கொண்டிருக்கிறேன். தாங்க முடியாத சந்தோஷத்தைத் தெரிவித்துக் கொள்வது எப்படி என்பதற்காகச் சிரித்துப் பார்த்தேன்" என்றாள்.

"சிரிப்பைக் கேட்டுப் பயந்து போய் விட்டேன், அம்மணி!" என்று அவன் சொன்னபோது அவன் முகத்தில் பயம் தத்ரூபமாகத் தோன்றிற்று.

"உன் முகத்தில் பாவங்கள் எல்லாம் அப்படியே தெரிகின்றனவே!"

"ஏதோ கொஞ்சங் கொஞ்சம் நமக்கு ஆக்ட் பண்ண வரும். டான்ஸ்கூட வரும், அம்மா! அரிவாள்மணை டான்ஸ் பண்ணட்டுமா?" என்று சொல்லிவிட்டு எஜமானியின் பதிலை எதிர்பார்க்காமலே நடனம் பண்ண ஆரம்பித்துவிட்டான்.

நடனம் ஆடினான்
வெகு நாகரிகமாகவே
அரிவாள் மணையைத்
தூக்கிக் கொண்டு ......

என்று பாட்டு வேறே. சௌந்தர்ய குமாரிக்கு எங்கே அரிவாள்மணை தலைமேல் விழுந்துவிடுமோ என்று பயம். மிகவும் சிரமப்பட்டு அவன் டான்ஸை நிறுத்தச் சொன்னாள்.



உதடுகள் அரும்பின ......

"நீ இவ்வளவு அருமையாக நடனம் செய்வாய் என்று எனக்கு இத்தனை ாளாய்த் தெரியாதே! நான் உன்னைப் ற்றி எங்க டைரக்டரிடம் சிபார்சு ண்ணுகிறேன்" என்று சொல்லிவிட்டு, 'அப்பாடா!" என்று உடம்பை ளைத்து விட்டுக் கொண்டு பெருமூச்சு விட்டாள்.

"ஏன் அம்மா! உடம்பு வலியா!" ன்று தம்புசாமி விசாரித்தான்.

"வலியா! பிராணன் போகிறது. இன்றைக்கு அந்த தர்பார் டான்ஸின் போது என் உயிரை வாங்கி விட் டார்கள்."

"அந்த டான்ஸ் ஸீன் ஷூட்டிங்தான் ஆயிடுத்தே."

"ஆமாம், ஆனால் அது சரியாயில்லை யாம். இன்றைக்கு இரண்டாந்தரம் த்திகை நடந்தது. நாலைந்து குமாஸ் ாக்கள், ஸ்டுடியோ ஆட்கள் எல்லாரும் பார்க்க வந்திருந்தார்கள். நான் நடனம் ஆடினேன். அதைப் பார்த்து இரண்டு பேர் மட்டும் கையைத் தட்டினார்கள். அது போதாதென்று டைரக்டர் சொல்லி விட்டார். எல்லோரும் ஒருவர் பாக்கியில்லாமல் 'ளாப்ஸ்' கொடுக் கும்படி ஆட வேண்டுமென்று சொன்னார்."

"அப்புறம்?"

"எனக்குத் தோன்றியபடியெல்லாம் ஆடினேன். முதலில் இடது காலைத் தூக்கியாடினேன். பிறகு வலது காலைத் தூக்கி ஆடினேன். அப்படியும் எல் லாரும் பேசாமல் உட்கார்ந்திருந் தார்கள்!"



நடனம் ஆடினான் வெகு நாகரீகமாகவே ......

"அப்புறம்?"

"கடைசியில் கண்டபடியெல்லாம் கூத்தாடத் தொடங்கினேன். ஒரே அமர்க்களம். 'பேஷ், பேஷ்' 'பலே, பலே' என்ற கோஷங்கள் எழுந்தன. சிலர் 'உஷ் உஷ்' என்று சீட்டி அடிக்கத் தொடங்கினார்கள். சிலர் தாங்கள் உட்கார்ந்த பெஞ்சியிலே என் நடனத்துக்குத் தகுந்தாற்போல் தாளம் போட்டார்கள். ஒருவர் நாற்காலியில் ஏறி நின்றுகொண்டு எனக்குப் போட்டியாக நடனம் செய்ய ஆரம்பித்து விட்டார். அப்பொழுதுதான் பட டைரக்டர், 'ஓ. கே.! இது பொது ஜனங்களுக்குப் பிடிக்கும்' என்று சொன்னார். அவர் முகத்தில் சந்தோஷம் தாண்டவமாடியது. அவர் என்னிடம் வந்து, 'ரொம்ப ஸக்ஸஸ்புல்' என்றார்.

ஆனாலும் தம்புசாமி, எனக்கு அப்படிக் கன்னாபின்னாவென்று நடனஞ் செய்ய மிகவும் வெட்கமா யிருந்தது."

"உங்களுக்கே வெட்கமா யிருந்ததா! அப்படின்னா நடிக்க மாட்டேனென்று சொல்லிவிடுகிறதுதானே?"

"சொல்ல முடியுமா? ஒப்பந்தத்திலே கையெழுத்து வாங்கி விடுகிறார்களே, அதிலிருந்து மீளமுடியுமா?" என்று சொல்லி 'ஹூம்" என்று ஒரு பெரு மூச்சு விட்டாள். பிறகு "எனக்கு இதைப்பற்றிப் பேசினாலே தலையை வலிக்கிறது. நல்லதாக ஒரு கப் காப்பி கொண்டு வா" என்றாள்.

"இதோ!" என்று தம்புசாமி ஓடிப் பத்து நிமிஷத்தில் காப்பி போட்டு எடுத்துக்கொண்டு வந்து ஒரு சிறிய மேஜை மீது வைத்தான்.

சௌந்தர்ய குமாரி காப்பியை எடுத்து முதல் வாய் சாப்பிட்டாள். அவள் வலது மூக்குத் துடித்தது. "காப்பி நன்றாய் இல்லையே!" என்றாள்.

"நன்றா யில்லையா? இப்போ கறந்த பாலாச்சே? காப்பிப் பொடி கூட மத்தியானம் வாங்கியதுதான்" என்றான்.

சினிமா ராணி சௌந்தர்ய குமாரியின் இடது மூக்குத் துடித்தது. "காப்பி நன்றாய் இல்லையென்றால் என்னென்னமோ சொல்கிறாய்; மட்டமான காப்பிப் பொடி வாங்கினாப் போலிருக்கிறது" என்று கோபித்தாள்.

"மட்டப் பொடியா? முதல்தரமான 'விந்தியா காப்பி'ப் பொடியல்லவா? வாங்கிப் போட்டிருக்கிறேன்" என்றான்.

அவ்வளவுதான். சௌந்தர்ய குமாரியின் மூக்கு முழுதும் துடிக்க ஆரம்பித்தது. காதுகள் இரண்டும் அகண்டன. (அவள் எப்பொழுதும் பாவத்துடன் தான் பேசுவாள்.) கையிலிருந்த காப்பியை எடுத்து விசி எறிந்துவிட்டு "விந்தியா காப்பியாம்! அந்தப் பொடியை உன்னை யார் வாங்கச் சொன்னது! மொச்சக் கொட்டை வாசனை யல்லவா வருகிறது?" என்று கூச்சல் போட்டாள்.

தம்புசாமிக்கு இன்னது செய்வது என்று தெரியவில்லை. அவனுக்கும் முழு மூக்கும் துடிக்கத் தொடங்கியது. இருந்தாலும் நிதானப் படுத்திக்கொண்டு உள்ளே போய் ஒரு தினசரிப் பத்திரிகையை எடுத்து வந்தான். அதில் ஒரு மூலையில் சௌந்தர்ய குமாரியின் படம் மாதிரி ஒன்று போட்டிருந்தது. அவளை விடப் படம் எவ்வளவோ மடங்கு அழகாயிருந்தது. தம்புசாமி அந்தப் படம் இருந்த இடத்தில் கையை வைத்துக்கொண்டு "நான் இதிலிருப்பதைப் படிக்கிறேன். கேளுங்கள்" என்று படத்தின் கீழிருந்ததைப் படிக்கலானான்:—

'சிங்கார சக்கரவர்த்தி,' 'தம்பிடிக்கு நாலு,' 'பக்த சிகாமணி மிஸ் பூச்சி பாய், பி. ஏ.,' 'எனக்கா கல்யாணம்?' என் படங்களில் கதாநாயகியாய்த் திறம்பெற நடித் தவரும், ஈடு இணையற்ற தமிழ்நாட்டு சினிமா ராணியுமான சௌந்தர்ய குமாரி சொல்லுகிறார்:—

"நான் பிறந்தவுடனே என் பாட்டி 'விந்தியா காப்பி ஒரு டம்ளர் கொடு' என்று சொன்னாளாம். அது முதல் இன்று வரையில் நான் விந்தியா காப்பியே சாப்பிட்டு வருகிறேன் மறு உலகத்திலும் அதையே சாப்பிடுவதா நிச்சயித்திருக்கிறேன். விந்தியா காப்பி பொடியின் பிரத்தியேக வாசனைக்கு ஈடு, அதன் பிரத்தியேக வாசனையேதான்.

இப்படிக்கு

சௌந்தர்ய குமாரி."

படித்து முடித்ததும் "நீங்களே இட படி சர்டிபிகேட் கொடுத்திருக்கிற களே என்றுதான் நான் விந்திய பொடியை வாங்கினேன்" என்றான் தம்புசாமி.

"உளறாதே! என் படம் தினம் பத்தி ரிகையில் வருமே என்றல்லவா அதி கையெழுத்துப் போட்டேன்? இன மேல் அந்த விந்தியா மண்ணாங்கட்டியை வாங்கவே வாங்காதே" என்றாள் சௌந்தர்ய குமாரி.

இதே சமயத்தில் விந்தியா கம்பெனி யின் முதலாளி மாணிக்கம் நாயு தம் வீட்டில் தலையில் கையை வைத்து கொண்டு உட்கார்ந்திருந்தார். அ பொழுது அங்கே வந்த அவர் நண்ப "என்ன இப்படிக் கவலைப் பட்டு கொண்டிருக்கிறீர்கள்? ஏதாவது பண விஷயமா?" என்று விசாரித்தார்.

"எனக்கு என்றைக்கும் பண கஷ்டமே கிடையாது."

"பின்னே?"

"நேற்று காப்பிக் கொட்டை வீசை 4—15—0 விதம் விற்று விட்டேன்."

"விற்ருல் என்ன?"

"பக்கத்துக் கடைக்காரன் ஐந்து ரூபாய்க்கு விற்ருன். இப்படி ஏமாந்து போய் விட்டோமே என்று இருக் கிறது ......"

"இதற்கெல்லாம் கவலைப் படுவார் களா? நாளைக்கு இன்னும் இரண்டணு கூட வைத்து விற்று விட்டால் போகி றது. நாம் என்ன விலை விற்ருலும் கேட்கிறவா யார்!" என்று தைரியம் கூறினர். அதற்கப்புறம்தான் நாயுடுவுக் குச் சிறிது கவலை குறைந்தது.

"வா! ஏதாவது ஸினிமாவுக்குப் போய்விட்டு வரலாம். வியாபார விஷ யத்தைக் கொஞ்சம் மறந்திருக்கலாம்" என்ருர் நண்பர்.

"நல்ல படம் ஏதாவது காண்பிக் கிருர்களா, சொல்லேன்?"

"'எனக்கா கல்யாணம்?' என்ற படத்துக்குப் போகலாமா?"

"அதிலே எந்த ஸ்டார் நடிக்கிருள்?"

"உனக்குத் தெரியாதா? உன் விந்தியா காப்பிப் பொடிக்கு ஸர்டிபி கேட் கொடுத்திருக்கிருளே, தமிழ் நாட்டு ஸினிமா ராணி சௌந்தர்ய குமாரி — அவள்தான்."

"அந்தச் சனியன் நடிக்கிற படத் துக்கா வரச் சொல்கிறே? அதன் மூஞ்சி யும் மோறக்கட்டையும்!"

"அதென்ன அப்படிச் சொல்கிறே? விளம்பரத்திலே பிரமாதப் படுத்திப் போட்டுவிட்டு?"

"போதுமே! அந்தப் போட்டோ வைச் சரிப்படுத்திப் போடுவதற்குள் என் பிராணன் போய்விட்டது. மேலும், அப்போது அவள் நடித்த படம் எது வும் நான் பார்த்துத் தொலைக்கவில்லை!"

"சரி, புதிசாக டார்ஸான் படம் வந் திருக்கிறது. அதில் கொரில்லாக்கள் நன்ருக ஆக்ட் பண்ணுகின்றனவாம்!"

"பேஷாய்ப் போச்சு! அந்தப் படத் தையே போய்ப் பார்க்கலாம்" என்று கிளம்பினுர் மாணிக்கம் நாயுடு.



சிவ கவி — தியாகராஜ பாகவதர்

● ஸ்ரீ தியாகராஜ பாகவதர் சிவகவி படத்தில் "பழைய குருடி கதவைத் திறடி" என்கிறாராம்! அவருடைய நடிப்பையோ, பாட்டையோ பற்றி இவ்விதம் நாம் சொல்லவில்லை. பாகவதர் 'சிவகவி' படத்தில் சிவகவியாகத் தோன்றி தாசி கூத்தாளின் வீட்டின் எதிரில் நின்றுகொண்டு, "பழைய குருடி கதவைத் திறடி!" என்று சொல்வதைத்தான் குறிப்பிடுகிறோம். மேற்படி தாசி முதன் முதலில் குருடாயிருந்து சிவகவியின் அருள் வாக்கால் கண் பார்வை பெற்றவள். இப்பொழுது சிவகவியின் வாக்குப் பலிக்கவே, மறுபடியும் அவள் கண் குருடாகிறது! ஆனால் கூத்தாள் தன்னை மன்னிக்கும்படி கெஞ்ச, சிவகவி மனம் இரங்கி மீண்டும் கண் பார்வை கொடுத்துவிட்டுப் போகிறார்! "பழைய குருடி கதவைத் திறடி!" என்று வழக்கம் போல் பாகவதர் தம் கண்களைப் பிடுங்கிக்கொண்டு விடாமல் இந்தப் படத்தில் பிறந்தியார் கண்களைக் கெடுப்பதும் கொடுப்பதும் இதோ அவர் பக்தியுடன் வணங்கும் முருகப் பெருமானின் அருளாகத்தான் இருக்க வேண்டும். மற்றப்படி சிவகவியில் அவர் பாட்டும் நடிப்பும் அபாரமாய்த்தான் இருக்கும்.

# படித்துப் பார்



## முத்தொள்ளாயிரம்

[ஆசிரியர்: இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்பிருந்த பெயர் தெரியாத தமிழ்க் கவி; பதிப்பாசிரியர்: டி. கே. சிதம்பரநாத முதலியார்; பிரசுரம்: புதுமைப் பதிப்பகம், காரைக்குடி; விலை: ரூபா மூன்று.]

"இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன் இருந்த கவிஞர், கவி மழுவைத் தங்கத் தகட்டில் வைத்து நீட்டுகிறார் நமக்கு" என்று டி. கே. சி. இந் நூலின் முகவுரையை முடித்திருக்கிறார்.

அந்தக் கவி மழுவைத் தங்கத் தகட்டுடனே அழகான தந்தப்பெட்டியில் வைத்து மூன்றே ரூபாய் விலைக்குப் புதுமைப் பதிப்பகத்தார் நமக்குக் கொடுக்கிறார்கள்.

சேரன், சோழன், பாண்டியன் என்னும் மூன்று தமிழ் வேந்தர்களையும் பற்றி, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்த ஒரு தமிழ் மகா கவி, தலைக்குத் தொள்ளாயிரம் பாட்டுக்கள் விதம் பாடினார். ஆகவே, அந்த நூலுக்கு முத்தொள்ளாயிரம் என்று பெயர் வந்தது. இந்த முத்தொள்ளாயிரம் பாடல்களில் 108 பாடல்கள்தான் இப்போது கிடைத்திருக்கின்றன. இவ்வளவாவது கிடைத்த வரையில் தமிழர்கள் அதிர்ஷ்டசாலிகள்தான்.

ஏனெனில், மேற்படி 108 பாடல்களில் தமிழ்க் கவிதையின் இன்பத்தை நாம் பூரணமாக அநுபவிப்பதுடன், பழந் தமிழ்நாட்டின் மகத்தான சிறப்புக்களையும் ஒருவாறு அறிந்து கொள்கிறோம்.

பாடல்கள் மிகவும் எளிய நடையில் அமைந்தவைதான். ஆனால், மிகப் பழங் காலத்துத் தமிழர் வாழ்க்கையைப் பற்றியன வாதலால், விஷயங்களைத் தெரிந்து கொள்வதற்குத் தக்க ஆராய்ச்சி அவசியம். அவ்விதமே, கவிப் பண்பை நன்கு உணருவதற்கும் உதவி தேவை. இந்த உதவியை ஸ்ரீ டி. கே. சி. அவர்களின் விளக்கக் குறிப்புக்கள் நமக்குத் தருகின்றன.

நமது கவிச் சித்திரப் பகுதியில் மூன்று முத்தொள்ளாயிரப் பாடல்கள் டி. கே. சி. யின் விளக்கத்துடன் வெளியாகி யிருக்கின்றன. அவற்றிலிருந்து இந்த நூலின் பெருமையை நேயர்கள் ஒருவாறு உணர்ந்திருப்பார்கள்.

இந்தப் புத்தகத்திலும் சில அருமையான உயர்தர வர்ணச் சித்திரங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. முக்கியமாக, கழனியில் செவ்வாம்பல்கள் மலர்ந்ததைப் பார்த்து, "வெள்ளம் தீப்பட்டு எரிகிறது" என்று அன்னங்கள் பயந்து, தங்கள் குஞ்சுகளைச் சிறகுகளில் அணைத்துக் கொள்ளும் மூவர்ணச் சித்திரம் அற்புதமாய் அமைந்திருக்கிறது.

தமிழ்நாட்டில் சென்ற சிறிது காலமாகப் புத்தக அமைப்புக் கலை வெகு துரிதமாக முன்னேறி வருகிறது. அந்த முன்னேற்றத்தின் சிகரமாக இந்தப் புத்தகம் விளங்குகிறது. ஆம்; தற்காலத் தமிழர்களாகிய நாம் அதிர்ஷ்டசாலிகள் என்பதுடன், அந்தப் பழந் தமிழ்நாட்டுக் கவிஞரும் அதிர்ஷ்டம் செய்தவர் என்றே சொல்ல வேண்டும்.

## ராஜா பர்த்ருஹரி

[ஆசிரியர்: ஸ்ரீ டி. கே. முத்துசாமி; பிரசுரம்: டி. கே. எஸ். சகோதரர், ஸ்ரீ பால ஷண்முகானந்த சபா, மதுரை; விலை: ரூ. 0—12—0.]

நாடகக் கலையைத் தற்காலத்தில் சிறந்த முறையில் வளர்த்து வருவோர் டி. கே. எஸ். சகோதரர்கள். அவர்கள் நடிக்கிற முறையில் "ராஜா பர்த்ருஹரி" நாடகத்தைப் புத்தகமாக வெளியிட்டிருக்கிறார்கள். இதற்கு ஏதேனும் காரணம் இருக்கத்தான் வேண்டும்.

---

## கவிச் சித்திர விளக்கம்

அளைந்து அளைந்து தொட்டுத் தொட்டுப் பார்த்து ஆனந்தமாக வெண்ணெய் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறான் கண்ணன். அவனைக் கையும் களவுமாய்க் கண்டு பிடித்து விடுகிறாள் யசோதை. உடனே தான் தயிர் கடைந்து கொண்டிருந்த கயிறும் கையுமாகவே அவனை அடிக்க வேணுமென்று நிர்மானிக்கிறாள். ஆனால் அந்தத் நிர்மானத்தை நிறைவேற்ற முடியாமலே நிற்கும்போது, அவனும் அவளைப் பார்த்து விடுகிறான். அப்போது வேறொரு களவுக்கு அந்த வாயும் சாட்சியாகிறது!

வெளுத்த தயிரும் சிவந்த வாயுமாய் அழுவதும், கண்ணிலே அச்சம் தோன்றப் பார்ப்பதுமாய், ஏதோ சொல்ல விரும்புவது போல் வாயை நெளித்து நெளித்து, கடைசியாக ரொம்பவும் பயந்தவனைப் போல் அந்த வெண்ணெய் தோய்ந்த கையால் தொழப் போகிறானும் கள்ளக் கிருஷ்ணன்.

இந்தக் காட்சியைக் காணும் யசோதைத் தாய் பரமபத இன்பத்தையே பூலோகத்தில் அனுபவிக்கிறாள் — என்கிறார் ஆழ்வார்.

குலசேகராழ்வாரின் அதிசயமான — தாயன்பு ததும்பும் — இருதய கானம் இது. கவிதைப் பேரின்பத்தைக் கண்டு காட்டும் உன்னத கானம் என்றும் இதைச் சொல்லலாம்.

முழுதும் வெண்ணெய் அளைந்துதொட் டுண்ணும்
முகிழிளஞ்சிறு தாமரைக் கையும்

எழில்கொள் தாம்புகொண் டடிப்பதற்கு என்கும்
நிலையும் வெண்தயிர் தோய்ந்த செவ்வாயும்

அழுகையும் அஞ்சி நோக்கும் அந்நோக்கும்
அணிகொள் செஞ்சிறு வாய்நெளிப் பதுவும்

தொழுகையும் இவை கண்ட யசோதை
தொல்லை இன்பத்து இறுதிகண் டாளே!

கவிச் சித்திரம்—13 —குலசேகராழ்வார்.






# மாய வண்டி

பள்ளிக்கூடம் விடுமுறை விட்டதும், ராஜு எல்லோருடனும் நீலகிரிக்குப் போனான்.

ஒரு நாள் அவன் தங்கை சாந்தாவும் அவனும் தனியாக ஒரு மலைமேல் நடக்க ஆரம்பித்தார்கள். சிறிது தூரம் சென்றதும் அடர்த்தியான காடு வந்தது. "இனிமேல் போனால் வழி தெரியாது திரும்பிவிட வேண்டியதுதான்" என்று எச்சரித்தாள் சாந்தா. "மேக மண்டலத்துக்குப் போனால்கூட நான் வழி கண்டு பிடித்து விடுவேன்" என்று ஜம்பம் அடித்துக்கொண்டான் ராஜு.

"அதோ அங்கே பார் அண்ணா!" என்று திடீரென்று கத்தினாள் சாந்தா.



ராஜு சட்டென்று திரும்பிப் பார் தான். சற்றுத் தூரத்தில் அவன் கண்ணுக்கு ஏதோ புலப்பட்டது இருவரும் ஓடிப் பார்த்தனர். 'பள பள' வென்று ஒரு சக்கரம் சூரி வெளிச்சத்தில் பிரகாசித்துக் கொண் டிருந்தது. "ஆஹா! எவ்வளவு பெரி சக்கரம்! தங்கம் மாதிரி மின்னு கிறதே!" என்று கத்தினாள் சாந்தா.

அந்தச் சக்கரத்தை ராஜு எடுத்து கொள்ளவே இருவரும் கீழே இறங் ஆரம்பித்தார்கள். அப்பொழு ராஜுவின் காலில் ஏதோ தட்டு பட்டது. "சாந்தா! இதோ ஒ சக்கரம்! நமக்கு இன்று வேட்டை தான் போ!" என்றான் ராஜு.

சாந்தா அதை எடுத்துக் கொள்ள குனிந்தபோது, மேலே மரத்திலிருந் ஒரு சின்னக் காய் அவள்மேல் விழு ந்தது. இருவரும் அண்ணாந்து பார் த்தார்கள். மரக் கிளையில் இரண் சக்கரங்கள் தொங்கிக் கொண்டிரு ந்தன. ராஜு நாலைந்து கல்லை வி ட்டெறிந்தான். சக்கரங்கள் ஒவ்வொ ன்றாகக் கிளையிலிருந்து 'பொத்' 'பொத் தென்று கீழே விழுந்தன.

அம்மரத்தடியில் நாலைந்து பலகை கள் கூட இருந்தன. "இந்தப் பலகை களை எல்லாம் கயிற்றால் கட்டி சக்கர த்தையும் பூட்டி விட்டால் பேஷா வண்டியாகப் போகும். அதில் ஏ உட்கார்ந்து கொண்டு நாம் விளை யாடலாமல்லவா?" என்று யோசனை சொன்னாள் சாந்தா. ஆனா அவர்கள் வண்டியைக் கட்டுவத ற்காகச் சக்கரத்துடன் பலகைகளை சேர்த்ததுதான் தாமதம், அவை 'கிர்' 'கிர்' ரென்று ஒன்றோ டொன்று ஒட்டிக்கொண்டு வண்டியா விட்டன!



"எவ்வளவு அழகான வண்டி!" என்று இருவரும் கத்தினார்கள். "இதில் உட்கார்ந்து கொள்ளலாம், வா" என்றாள் சாந்தா. இருவரும் அதில் ஏறி உட்கார்ந்து கொண்டார்கள். வண்டி நகர ஆரம்பித்தது. "ஹேய்! ஹேய்! வண்டி தானாக நகருகிறதே!" என்றான் ராஜு. வண்டி வேகமாக ஓட ஆரம்பித்தது. பிறகு, செடி கொடிகளைத் தாண்டிக் குதித்துக் கொண்டு பறக்க ஆரம்பித்தது. "அண்ணா! ரொம்ப ஜோரா யிருக்கே; ஏரோப்ளேன் மாதிரி போகிறதே!" என்றாள் சாந்தா. அப்பொழுது நிஜமான ஏரோப்ளேன் சமீபத்தில் பறக்கும் சப்தம் கேட்கவே அவர்கள் பயந்து போனார்கள். "நம்ப வண்டியும் அதுவும் முட்டிக் கொண்டால் என்ன பண்ணுகிறது?" என்று சாந்தா பயந்தாள்.

நல்ல வேளையாக, வண்டி பறந்து வந்து ஒரு மாளிகையின் மேல் மாடி அருகில் வந்து நின்றது. அவர்களிருவரும் இறங்கி எதிரே யிருந்த ஹாலுக்குள் போனார்கள். அங்கே ஒரு கம்பளத்தில் விதம் விதமான பட்சணங்கள் இருந்தன. இருவர் நாக்கிலும் ஜலம் ஊற ஆரம்பித்தது. சுற்றுமுற்றும் பார்த்தார்கள். ஒருவரும் இல்லை. இருவரும் பட்சணத்தை எடுத்துச் சாப்பிட்டார்கள். "சாந்தா! என் சட்டையைப் பார்! நான் போட்டுக் கொண்டிருந்த சிகப்புச் சட்டை வெளுப்பாகி விட்டதே; என்ன ஆச்சரியம்!" என்றான் ராஜு. "என் வெள்ளைச் சட்டை கூடச் சிகப்பு ஆகி விட்டதே" என்றாள் சாந்தா.

இருவரும் வண்டி இருந்த இடத்திற்கு வந்தார்கள். மேல் மாடி யெல்லாம் அப்போது அடர்த்தியான செடிகள் வளர்ந்திருந்தன. "அதற்குள் எப்படி இங்கே செடி வளர்ந்திருக்க முடியும்?" என்று அதிசயித்தார்கள். வண்டிக்குள் கூட ஒரு செடி முளைத்திருந்தது. அதில் உள்ள சிவப்புப் பூவைப் பறிப்பதற்காக அவர்கள் வண்டிக்குள் ஏறினர்.

இவர்கள் ஏறியதுதான் தாமதம், மறுபடியும் வண்டி பறக்க ஆரம்பித்து விட்டது. இருவரும் ஆரவாரம் செய்துகொண்டே பிரயாணம் செய்தார்கள்.

வண்டி அவர்கள் தங்கியிருந்த பங்களா வாசலில் வந்து நின்றது. இருவரும் இறங்கி, "அம்மா! அம்மா! இங்கே வாயேன். இந்த வண்டியைப் பாரேன்!" என்று சத்தம் போட்டுக் கொண்டே உள்ளே ஓடினார்கள். "அண்ணா! அந்த வண்டியை நாம் உள்ளே கொண்டுவந்து வைத்துக் கொண்டால் வேண்டியபோது சவாரி செய்யலாமே" என்றாள் சாந்தா. ராஜு வண்டி இருந்த இடத்திற்கு ஓடினான். ஆனால் வண்டியைக் காணவில்லை!

"சாந்தா! ராஜு! இங்கே வாருங்கள்! முதுகில் இரண்டு அறை வைக்கிறேன். இத்தனை நாழியாக எங்கே போயிருந்தீர்கள்!" என்ற அம்மாவின் குரல்தான் அப்பொழுது கேட்டது.





# காலக்ஷேபம்

## கெட்டிக்காரன்

**உபாத்தியாயர்:**—பண்புப் பெயர்களை மனத்தால் ஊகித்தறியலாமேயன்றிக் கையினால் தொடமுடியாது. உதாரணமாக இளமை. ராமா, நீ ஒரு உதாரணம் சொல் பார்க்கலாம்.

**ராமன்:**—பழுக்கக் காய்ந்த இரும்பு, ஸார்!

—டி. வி. நாராயணன்.

* * *

## சூடான பதில்

**தகப்பன்:**—ஏ, கழுதே! எங்கேடா போகிறாய்?

**மகன்:**—ஏன் அப்பா? வண்ணான் வீட்டுக்குப் போகிறேன்.

—கே. ராமமூர்த்தி.

* * *

## யாருக்கு அதிர்ஷ்டம்?

**வேலைக்காரி:**—சாமீ! நான் இந்த மாதக் கடைசிலே நின்னுடப் போறேனுங்க! எஜமானியம்மா எப்பப் பார்த்தாலும் சண்டைப் போடறாங்க!"

**எஜமான்:**—நீ அதிர்ஷ்டக்காரியம்மா! நீ நினைத்தால் போய்விடலாம்; நான் எங்கே போவது?

—கே. பத்மநாபன்.

* * *

## நல்ல யோசனை

தூக்குப் போடுவதற்கிருந்த ஒரு கைதிக்குத் திடீரெனத் தேக அசௌக்யம் ஏற்பட்டு விட்டது. டாக்டர் வரவழைக்கப் பட்டார். அவர் கைதியின் கையைப் பார்த்துக் கீழ்க் கண்ட சர்டிபிகேட் கொடுத்தார்:—

"என் அபிப்பிராயப்படி, கைதி இப்போது தூக்கு மேடைக்கு அழைத்துச் செல்லப்பட்டால், அவனுக்குத் தேக அசௌக்கியம் கடுமையாகி உயிர்ச்சேதத்தையும் உண்டு பண்ணலாம்."

—எஸ். ராமமூர்த்தி.

## நல்ல அத்தாட்சி!

**மாஜிஸ்ட்ரேட்:**—உன்னுடைய யோக்யதையைப் பற்றிச் சாட்சி சொல்லக் கூடியவர்கள் யாராயினும் இங்கிருக்கின்றார்களா?

**குற்றவாளி:**—என் யோக்யதையைப் பற்றிப் போலீஸ் இன்ஸ்பெக்டரைக் கேளுங்கள்.

**இன்ஸ்பெக்டர்:**—இவன் யாரென்றே எனக்குத் தெரியாது.

**குற்றவாளி:**—பார்த்தீர்களா! நான் இவ்வூரில் பத்து வருஷமாக வசிக்கிறேன். அப்படியிருந்தும் இன்ஸ்பெக்டருக்கு என்னைத் தெரியவில்லையென்றால் என்னுடைய யோக்யதைக்கு வேறென்ன அத்தாட்சி வேண்டும்!

—கே. வி. ரங்காச்சாரி.

* * *

## 'பார்த்து எழுதல்'

**ராமு:**—அம்மா! மணி ஒன்பதரை ஆயிடுத்து! நான் பரீக்ஷைக்குப் போகணும். சீக்கிரம் சாதம் போடு!



**தாயார்:**—குழந்தே, பரீக்ஷையாடா இன்னிக்கு? பார்த்து நன்னா எழுதிட்டு வாடா.

**ராமு:**—பார்த்து எழுத வாத்தியார் விடமாட்டானே!

—எஸ். ஜயராமன்

# தமிழ் வளர்ந்த கதை

## 3. இரண்டு சூரியர்கள்

இருள் நீங்கிச் சூரியோதயம் ஆகும் இயற்கை யற்புதத்தை ஆதி மனிதர்கள் எவ்வளவோ ஆச்சரியமாகப் பார்த்துப் பார்த்து அனுபவித்திருக்க வேண்டும். "மலையிலே உதிக்கிறது; உதித்துக் கடல் சூழ்ந்த இந்த உலகத்திலுள்ள இருட்டை யெல்லாம் போக்குகிறதே அந்தச் சூரியன்! அதைத் தெய்வ சமானமாகவே மதித்துத் தொழ வேணும்: ஆம், அந்தச் சூரிய பகவானே கண் கண்ட தெய்வம். அதோ ஒற்றைச் சக்கரத்தோடு கூடிய ஜோதி மயமான ஒரு தேரில் வருகிறாரே, தம் செஞ்சுடர்க் கதிர்களால் இரவாகிய கருந் திரையை விலக்கிக் கொண்டு! என்ன அழகான, மின்னல் போன்ற தேஜஸ்! ஆஹா, என்ன அற்புதமான கருணை!" என்றெல்லாம் அதிசயித்தார்கள், ஆனந்தித்தார்கள், நம் முன்னோர்கள். பழம் புலவர்கள் அந்த அதிசயத்தை — அந்தத் தெய்விக ஆனந்தத்தைப் — பாட்டாகவும் பாடியிருக்கிறார்கள். இத்தகைய உணர்ச்சியோடுதான் ஆதிகாவியமாகிய ராமாயணம் பாடிய வால்மீகி மகரிஷியும் தமிழ் முனிவரான அகஸ்திய மகரிஷியைச் சூரிய சமானர் என்று வர்ணித்திருக்க வேண்டும்.

ஆனால் இந்தச் சூரியனோடு போட்டி போடுகிறது வேறொரு சூரியன் என்று ஒரு பழந் தமிழ்ப் புலவர் பாடியிருப்பது இன்னும் அதிசயமாகவே தோன்றுகிறது. அந்தச் சூரியனும் மலையிலே உதித்து இருளைப் போக்குகிறதாம்: இந்தச் சூரியனைக் காட்டிலும் அற்புதமாக விளங்குகிறதாம் அது. ஏதோ ஒரு புதிர் போடுகிற மாதிரி இருக்கிறதல்லவா?

நல்லது: கேளுங்கள் அந்தப் பெயர் தெரியாத புலவர் வாக்கு மூலமாகவே, அந்தப் புதிரையும் அதற்கு அவரே கூறும் விடையையும்:

ஓங்கல் இடைவந்(து),
  உயர்ந்தோர் தொழவிளங்கி;

ஏங்கொலிநீர் ஞாலத்(து)
  இருள்கடியும்—ஆங்(கு)அவற்றுள்,

மின்நேர் தனிஆழி
  வெங்கதிர்ஒன்(று); ஏனையது

தன்நேர் இலாத தமிழ்

[ஓங்கல்: மலை; ஏங்கு ஒலி: ஆரவாரம் செய்யும் ஓசை; ஞாலம்: உலகம்; கடியும்: நீக்கும்; மின் நேர்: மின்னலை ஒத்திருக்கும்; தனி ஆழி: ஒற்றைச் சக்கரம்; வெங்கதிர்: வெப்பம் தரும் கிரணங்களையுடைய சூரியன், விரும்பத் தக்க கிரணங்களையுடைய சூரியன்; ஏனையது: மற்றது; தன் நேர் இலாத: தனக்கு ஒப்பு இல்லாத.]

தாய்மொழியாகிய தமிழ்மொழிதான் அந்த அற்புதமான சூரியன் என்கிறார். உலகத்திலுள்ள இருளைச் சூரியன் போக்குவதுபோல் தமிழும் அறியாமையாகிய இருளைப் போக்குகிறதாம். சூரியன் போக்குவது புற இருள்தான்: தமிழோ அறிவுச் சுடரால் — தன் இலக்கிய இலக்கணமாகிய கதிர்களால் — அக இருளையே போக்கி விடுகிறதாம். சூரியனுடைய ஒளிமயமான 'ஒற்றைச் சக்கர'த்திற்காவது மின்னலின் பிரகாசத்தை ஒப்பாகச் சொல்லலாம்: தமிழோ 'தன் நேர் இலாத தமிழ்' — தனக்கு ஒப்பே இல்லாதது! — என்கிறார்.

தமிழும் மலையிலேதான் உதய மாகிறதாம். தமிழுக்கு உதயகிரி அகஸ்திய பர்வதமாகிய பொதிய மலை என்றுதான் புலவர் கருதி யிருக்க வேண்டும். அகஸ்தியருடைய முக்கிய மாணாக்கரான தொல்காப்பியரும் திருவாங்கூர் என்று இந்நாளில் சொல்லப்படும் மலையாளப் பிரதேசமாகிய மலைநாட்டிலே வாழ்க்

தவர்தான் என்று ஊகம் செய்யப் படுகிறது. அந்த மலையாளப் பிரதேசமும் பொதிய மலைப் பிரதேசம் தான். ஆதி காலத்திலே தமிழ் மொழி, திருநெல்வேலி ஜில்லாவையும் திருவாங்கூரையும் சேர்ந்ததென்று இந்நாளில் சொல்லப்படும் பொதிய மலைப் பிரதேசமாகிய மலை நாடுகளில் திருத்தம் பெற்று வளர்ந்ததென்று தெரிகிறது.



'உயர்ந்தோர் தொழ விளங்கி'

அப்படி வளர்ந்த தமிழ் 'உயர்ந்தோர் தொழ விளங்கி'ய தென்கிறார் அந்தப் பழம் புலவர். 'சூரிய சமானர்'களான அகஸ்தியர், தொல்காப்பியர் முதலான அந்தப் பேரறிவாளர்களும் தொழுதார்களாம் தமிழாகிய சூரியனை. அவர்களும் தொழுது கற்கும்படி அவ்வளவு சிறந்த பாஷையாக இருந்ததாம் தமிழ், அந்த நாளிலேயே.

ஒரு பாஷை சிறந்து வளர வேண்டும் என்றால், அதைப் பேசி வந்த ஜனங்கள் அறிவிலும் நாகரிகத்திலும் வளர்ந்திருக்க வேண்டும். உண்மையில், ஜனங்களின் உயர்வு தான் அவர்களுடைய பாஷையின் உயர்வாகவும் பரிணமிக்கிறது.

**ஆடை யெல்லாம்**
**அணிவோர் சிறப்பே ;**

**பாஷை யெல்லாம்**
**பயில்வோர் சிறப்பே**

என்று மனோன்மணிய ஆசிரியர் கூறுவது எவ்வளவு உண்மையானது!



மலையிலே உதித்த தமிழ், உயர்ந்தோரால் பயிலப்பட்டு விளங்கியதென்று கருதுவது பொருத்தமானதுதான். 'இலக்கியம் கண்டதற்கு இலக்கணம்' என்றபடி தங்களுக்கு முன்பு இருந்த முத்தமிழிலக்கியங்களையும் ஆராய்ந்தே அகஸ்தியரும் தொல்காப்பியரும் இலக்கணங்கள் இயற்றியிருக்க வேண்டும்.

இந்த இலக்கணங்களில் அகத்தியத்தையே முத்தமிழிலக்கணம் என்கிறார்கள். தொல்காப்பியம் இயற்றமிழ் இலக்கணம்தான். எனினும் ஆசிரியர் தொல்காப்பியருக்கும் முத்தமிழின் இயல்பும் தெரியும் என்பதற்குத் தொல்காப்பியத்திலுள்ள சில குறிப்புக்கள் சான்று தருகின்றன.

சங்க கால இலக்கணங்களில் தொல்காப்பியம் ஒன்றுதான் இப்போது முழு நூலாகக் கிடைக்கிறது. இப்போதுள்ள தமிழ் நூல்கள் அனைத்திலும் தொன்மையானதென்று சொல்லப்படும் இந்நூல், பழைய தமிழர்களின் பாஷை வளர்ச்சிக்கும், நாகரிகப் போக்கிற்கும் மனப் பண்பிற்கும் ஒரு நல்ல சாட்சியாக இருக்கிறது. உதாரணமாக, தொல்காப்பியர் தமது இலக்கணத்திலே 'மக்கள் யார்?' என்ற கேள்விக்கு விடை கூற முயன்று,

மக்கள்தாமே ஆறறிவுயிரே

என்று பொதுவாக அவர்களுடைய இலக்கணத்தையும் சுருங்கக் கூறி விளங்க வைக்கிறார்.

மெய் (உடல்), வாய், கண், மூக்கு, செவி — என்ற ஐம்புலன்கள் வழியாக மட்டும் உணர்வு அல்லது அறிவு அடையும் உயிர்களை 'ஐயறிவுயிர்' என்கிறார். இந்த ஐயறிவோடு மன உணர்வாகிய பகுத்தறிவும் உள்ளவர்களே மக்கள் — என்பது கருத்து. பகுத்தறிவில்லாதவர்களை 'மக்கள்' என்று தொல்காப்பியர் ஒப்புக் கொள்ளவில்லை. இவர்களை 'மாக்கள்' என்கிறார். இந்த மாக்களை மக்களோடு சேர்த்துப் பேசாமல் மிருகங்களோடு சேர்த்து.

மாவும்மாக்களும் ஐயறிவினவே!

[மா: மிருகம்; ஐயறிவினவே: ஐயறிவை யுடையன.]

என்கிறார். 'ஐயறிவினரே' என்று சொல்லாமல் 'ஐயறிவினவே' என்று கூறுவதைப் பாருங்கள். இதைத் தொல்காப்பியர் சித்தாந்தம் என்றே சொல்லலாம்.


## சந்தா விவரம்

('கல்கி' மாதம் மும்முறை)

ஏப்ரல் முதல் தேதியிலிருந்து

வருஷ சந்தா ... ரூ. 9—0—0

ஆறு மாத சந்தா... ரூ. 4—8—0

குறிப்பு:—இலங்கைக்கும் புதிய சந்தா விகிதம் மேற்கண்டபடிதான்.


தொல்காப்பியர், அகஸ்தியர் போன்ற உயர்வு வாய்ந்தவர்கள் ஆதியில் மலை நாடுகளிலே விதைத்த விதைதான், செந்தமிழாகத் தழைத்து வளர்ந்து, 'கம்பன் கவிதை' போன்ற அற்புத விளைவுகளையும் அளித்திருக்கிறது. இத்தகைய செந்தமிழைத் தங்கள் அக இருள் போக்கும் ஞான சூரியனாகத் தமிழ் மக்கள் கருதியதில் அதிசயமில்லை.

# பழகின தோஷம்

[ கு. ப. ராஜகோபாலன் ]

"எப்பொழுது பார்த்தாலும் இதென்ன படிப்பு, எழுத்து! நீங்கள் என்ன சன்யாசியா? போதாக் குறைக்கு......"

அவள் முடிப்பதற்குள் நான் உள்ளே நுழைந்து விட்டேன்; பேச்சை நிறுத்தி விட்டாள்.

என் நண்பன் குனிந்து எழுதிக்கொண்டிருந்தான். அவன் நான் வந்ததைப் பார்க்கவில்லை. தலையை எடுக்காமலேயே "உம்—சொல்லேன்—போதாக் குறைக்கு—?" என்றான். அவள் பதில் சொல்லாமல் புன்னகையுடன் என்னைப் பார்த்துக் கொண்டு நின்றாள்.

"போதாக்குறைக்கு என் சிநேகிதன் என்கிறாயாக்கும்! ஆமாம், என்ன செய்யவேண்டு மென்கிறாய், சற்றுச் சொல்லேன்!" என்று சாவதானமாகப் பேனாவைக் கீழே வைத்து விட்டுத் தலை நிமிர்ந்து பார்த்தான்.

என்னைக் கண்டதும் "வாடா, உட்கார்," என்று சொல்லி விட்டுத் தன் மனைவியைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே "அவனும் வந்து விட்டான், பாக்கியையும் சொல்லிவிடு!" என்றான்.

"என்ன சொல்லுகிறது? மார்க்கெட்டுக்குப் போய் நல்ல காய்கறியாகப் பார்த்து வாங்கிக் கொண்டு வரக் கூடாதோ என்று சொன்னேன். குழந்தையை அனுப்பினால் அவனுக்கு என்ன தெரிகிறது? வெறும் பூச்சி பிடித்த அவரைக் காயாக வாங்கிக் கொண்டு வந்திருக்கிறான்" என்று சொல்லிவிட்டு மீனாட்சி உள்ளே போய் ஒரு டம்ளர் காபியைக் கொண்டு வந்து மேஜைமேல் வைத்து விட்டுப் போனாள்.

"சாப்பிடுடா, உனக்குத்தான் கொண்டு வந்து வைத்திருக்கிறாள்" என்றான் என் நண்பன்.

சாப்பிட்டுக் கொண்டே நான் "சொல்லுகிறது சரிதானே! வீட்டு விவகாரங்களையே நீ காதில் போட்டுக் கொள்ளுவதில்லை" என்றேன்.

"நீயும் சேர்ந்து கொண்டாயா? அடியே, இங்கே வா! உன் கட்சிக்கு ஆள் சேர்ந்திருக்கிறது" என்று சமையலறையைப் பார்த்துக் கூப்பிட்டான்.

"ஆள் சேருகிறதென்ன? உள்ளதை யார்தான் சொல்லமாட்டார்கள்?" என்று சொல்லிச் சிரித்துக்கொண்டே மீனாட்சி வெளியே வந்தாள்.

"நீ தான் சகலமும் பார்த்துக் கொள்ளுகிறாயே, நான் என்ன செய்ய வேண்டும்?"

"உன் பேரில்தான் தப்பு, மன்னி! வண்ணான் உருப்படி முதல் கொண்டு நீ எண்ணிப் போட்டுக் கணக்கெழுதுகிறாய், அதுதான் பிசகு!" என்று சொல்லி நான் சிரித்தேன்.

மீனாட்சியும் நானும் கொஞ்ச நாட்களாகத்தான் பேசுகிறோம். என் முன்னால், அவள் தன் புருஷனுடன் பேச ஆரம்பித்ததே போன வருஷம்தான். அதற்கு முன்னெல்லாம் நான் இருந்தால் புருஷனுடன் பேசமாட்டாள். என்னுடனோ பேசுவதே கிடையாது. ஆனால் இப்பொழுது கிழவியாகப் போய் விட்டதாக அவள் எண்ணம்.

மீனாட்சிக்கு வயது முப்பத்தைந்து நாலைந்து — கணக்காகச் சொன்னால் ஐந்து — குழந்தைகளைப் பெற்று விட்டதால் இனிமேல் முன்போல சங்கோசமெல்லாம் வேண்டாம் என்று எண்ணினாளோ? அல்லது பழகப்பழக, நாளாக ஆக, அந்த சங்கோசம் அர்த்தமற்றுப் போய்விட்டதோ?

அவள் சிறு பெண்ணாகப் பாவாடை கட்டிக் கொண்டு, கருவிழியும் கண்ணுமாக விழித்து விழித்துப் பார்த்துக் கொண்டு வந்தது முதல் அவளை எனக்குத் தெரியும். சம்பந்திகளுக்குப் பெண்ணைக் காட்டுவதற்காக அவள் தாயார் அவளைக் கூட்டிக் கொண்டு வந்திருந்தாள். நான் சதா சர்வ காலமும் என் நண்பனுடன் கூடவே இருப்பவன் என்று அவள் அது முதலே தெரிந்து கொண்டாள். கல்யாணத்தின் போது அவள் அரைக் கண்ணாகவும் முழுக் கண்ணாகவும் புருஷனைப் பார்த்த பொழுதெல்லாம் நான் ஒருவன் அவனுடன் அவனுடைய ஆனந்தத்தை அவ விட்டுக் கொண்டிருந்தேன் என்பதைக் கண்டு அவளுக்கு வெகு ஆத்திரமாக இருந்திருக்கும். பல வருஷங்களுக்குப் பிறகு புருஷனுடன் அந்த மாதிரியே சொல்லி யிருக்கிறாள் வேடிக்கையாக

என்னை அவன் ஒரு எதிரி போல அப்பொழுது பாவித்தாள்.

தான் புருஷனுக் கெழுதிய கடிதங்களை அவன் என்னிடம் காட்டுவான் என்று அவளுக்குக் கோபம். அதற்காகக் கடிதம் எழுதாமலும் இருக்கவில்லை. நினைவு வருகிறது: ஒரு தடவை அவளுடைய கடிதத்துக்கு அவன் உடனே பதில் போடவில்லை. அவள் ஒரு கவரில் நான்கு காலணாக்களை வைத்து மறுபடி கடிதம் போட்டாள். பதில் கடிதம் எழுதுவதற்குச் செலவு—அப்பொழுது கவர் ஓரணாதான்! நாங்கள் பேச ஆரம்பித்த பிறகு இப்பொழுது கேட்டேன் ஒரு சமயம்:

"நான்கு காலணாக்களை வைத்து அனுப்பினாயே, மன்னி! எதற்கு?" என்றேன்.

"அதையெல்லாம் வெட்கமில்லாமல் உங்களிடம் காண்பித்தாராக்கும்!" என்று சொல்லி அவள் முகம் சிவக்கச் சிரித்தாள்.

அவள் புக்ககம் வந்து புருஷனுடன் வாழ்க்கை ஆரம்பித்தவுடன்தான் என்னிடம் அவளுக்குக் கோபம் அதிகமாக ஏற்பட்டது. ஏன் ஏற்படாது! அவளுடன் பேசிக் கொண்டிருக்க வேண்டிய நேரமெல்லாம் அந்த அசடு என்னுடன் இலக்கிய சர்ச்சை செய்துகொண்டிருந்தால் அவளுக்கு எரிச்சல் வராதா? தன் கோபத்தை எத்தனை வகைகளில் காட்டலாமோ அப்படியெல்லாம் காட்டுவான். எங்கள் இருவருக்குமே அது தெரிவதில்லை. எனக்குத்தான் தெரியவில்லை என்றால் என் நண்பனுக்காவது தெரிந்திருக்க வேண்டும். பின், அவன் வாய் விட்டுச் சொல்லுவானா? அப்படி இரண்டு வருஷங்கள். பிறகு என் மனைவி ஸரஸ்வதி வந்துதான் நிலைமை சற்று மாறிற்று. இரண்டு பேரும் சொந்த சகோதரிகளுக்கு மேலாகப் பழக ஆரம்பித்தார்கள்.





"அடுத்த வாரம் அவன் ஊரை விட்டே போகிறான்!"

ஆனால் அந்த இரண்டு வருஷங்களுக்குள்தானே அவளுடைய இளம் உள்ளத்து இன்ப ஆர்வங்களெல்லாம் பொங்கிக் கொண்டிருந்தன! எனவே என்னைக் கண்டாலே அவள் முகம் கறுத்துவிடும்.

ஏது முதல் அவள் மனம் மாறி எனக்குத் தன் உள்ளத்தில் கொஞ்சங் கொஞ்சமாக இடம் கொடுத்தாள் என்பதை நிர்ணயிக்க முடியாது. முதல் முதலாக அவள் மனதை நான் அறிந்தது அவன் காய்ச்சலுடன் படுத்துக்கொண்டிருந்த பொழுது.

வீட்டில் வேறு உதவி கிடையாது. அவன்தான் கிட்டே. நான் கஞ்சி வைப்பது, ஆஸ்பத்திரிக்குப் போவது முதலிய காரியங்களைச் செய்தேன். அப்பொழுது கூட அவன் நான் இருக்கும்பொழுது மிகவும் சங்கோசப் படுவான். புருஷன் தன் அருகில் உட்காரக் கூடாது என்று சொல்லி விடுவான். இருபது நாட்கள் ஜுரம். "அவர் காப்பி சாப்பிட்டாரோ?" "சாதம் சாப்பிட்டாரோ?" என்ற புருஷனைப் பற்றிய கேள்விகள் அவளிடமிருந்து பிறக்கலாயின. நடுவில் ஜுரம் கடுமையாக இருந்து ஒரு நாள் நாங்கள் இருவரும் நாள் முழுவதும் சாப்பிடவே இல்லை. பிரக்ஞை வந்ததும் அவள் "நீங்களும் சாப்பிடவில்லை, அவரும் சாப்பிடவில்லை போலிருக்கிறதே. போய்ச் சாப்பிடுங்கள்!" என்றான்.

மெதுவாக நான் மைத்துனன் ஆகிவிட்டேன். அப்பொழுது என் மனைவி புக்ககத்திற்கு வந்துவிட்டாள்.

"எங்கே இன்னிக்கி மச்சினரைக் காணோம்? கூட்டிண்டு வாங்கோ, இன்னிக்கி ஹல்வா பண்ணியிருக்கேன். அவ

ருக்குப் பிடிக்குமே!" என்றாளாம் ஒரு நாள். அவன் உடனே வந்துவிட்டான்.

"அடே, உன் மன்னி ஹல்வா பண்ணியிருக்காளாம். உனக்குத்தான் பிடிக்குமாம், வா!" என்று கூட்டிக் கொண்டு போனான்.

"இப்ப ஏன் மச்சினர் முன் போல அவ்வளவு வருகிறதில்லே?" என்று கேட்டாளாம் ஒரு நாள்,

நான் போனபோது அவன் என்னிடம் சொன்னான். சொல்லிவிட்டுச் சிரித்துக் கொண்டே "அகமுடையாள் வந்த புதிதல்லவா?" என்றான்.

"உங்கள் அகமுடையாள் வந்த புதிதில் நீங்கள் என்ன செய்தீர்கள்?" என்று பிறகு அவனைக் கேட்டாளாம்.

முன்பெல்லாம் நான் நண்பனைத் தேடிக் கொண்டு போனால் அவன் வீட்டில் இல்லாவிட்டால் பதில் வராது. பிறகு குழந்தை வீட்டில் இருந்தால், "ஆபீஸிலிருந்து வல்லேன்னு சொல்லுடா!" என்று என் காதில் படும்படி சொல்லுவாள்.

சில மாதங்களுக்கு முன்பு ஒரு நாள் அவளாகத்தான் என்னிடம் பேசினாள். பேச வேண்டிய அவசியமும் ஏற்பட்டிருந்தது.

"ஸரஸ்வதியும் நானும் இன்னிக்கி சினிமா போகிறோம்!" என்றாள். நான் என் நண்பனை வழக்கம் போல் பார்க்கப் போனேன். அவன் வீட்டில் இல்லை.

அவ்வளவு வருஷங்களாக இல்லாமல் அவள் திடீரென்று என்னுடன் பேசினதும் எனக்குக் கொஞ்சம் சங்கோசமாகப் போய்விட்டது.

சமாளித்துக்கொண்டு "தாராளமாய்ப் போங்கள்!" என்றேன்.

"டிக்கட் யார் வாங்கிக் கொடுப்பார்கள்? நீங்கள் இரண்டு பேருங்கூட வர வேண்டும்" என்றாள் அவள்.

எங்களுக்கு வேறென்னவோ வேலை, நாங்கள் போகவில்லை. நாங்கள் இருவரும் பேச ஆரம்பித்ததை நண்பன் தெரிந்து கொள்ள வேண்டுமென்று மறுநாள் என் நண்பன் முன்பு "நீங்களே டிக்கட் வாங்கிக் கொண்டீர்களா?" என்று அவன் மனைவியைப் பார்த்துக் கேட்டேன்.

"வண்டிக்காரனை வாங்கச் சொன்னேன்!" என்று அவள் வெகு சாவதானமாகப் பதில் சொன்னாள்.

என் நண்பன் முக மலர்ச்சியுடன் இருவரையும் பார்த்துக்கொண்டு "அடே! எப்பொழுது முதல் ஆரம்பம் பேச்சு?" என்று கேட்டான்.

"நேற்று முதல்!" என்றேன்.

"அப்பாடா! பன்னிரண்டு வருஷங்களாயிற்று சங்கோசம் தீருவதற்கு! அடியே, இந்தா, ஒரு சமாசாரம்!" என்றான்.

அந்த சமாசாரத்தைக் கேட்க அவள் அங்கே நிற்கவில்லை.

வருஷக் கணக்கில் அர்த்தமில்லாமல் குறுக்கே நின்ற ஒரு திரை ஒருவிதமாக அகன்றதில் எல்லோரும் நிம்மதி அடைந்தோம்.

அவ்வளவுதான். முதல் சங்கடம் தீர்ந்ததும் மீனாட்சி வெகு தாராளமாக என்னிடம் சுக துக்கங்களைச் சொல்ல ஆரம்பித்து விட்டாள். அவளுடன் இயற்கையாக வார்த்தை யாடுவது எனக்குப் பிறகு புதுமையாகவோ ஆச்சரியமாகவோ தோன்றவே இல்லை. இருவரையும் நேருக்கு நேர் கேலி செய்யக்கூட ஆரம்பித்து விட்டேன்.

"மன்னி, உன் ராஜ்யத்தில் பிரஜைகள் ஒழுங்காகச் சொன்னபடி நடந்து வருகிறார்களா?" என்பேன்.

அவள் மகிழ்ச்சியுடனும் முறுவலுடனும் நிற்பாள்.

"மார்க்கெட்டுக்குப் போவோம், வருகிறாயா?" என்று ஒரு நாள் அவனைக் கேட்டேன் நான்,

உடனே என் நண்பன் நிமிர்ந்து உட்கார்ந்து "அடியே, மார்க்கெட்டில் ஏதாவது வேண்டுமா?" என்று கேட்டான்.

மீனாட்சி புன்னகையுடன் வேடிக்கையாக "அவர் கூப்பிட்டால் போவீர்கள். நான் சொன்னால் —" என்று சொல்லி வாய் மூடவில்லை.

என் நண்பன் சீறி விழுந்து "'அவர், அவர்' என்று ஏன் அவனைக் கரிக்கிறாய்? அடுத்த வாரம் அவன் ஊரை விட்டே போகிறான்!" என்றான்.

அதைக் கேட்டதும் மீனாட்சி முகத்திலிருந்த புன்னகை எங்கோ போய் விட்டது. அவன் எரிந்து விழுந்ததற்காக அல்ல; அவள் கேட்ட செய்திக்காகத்தான்.

"ஊரை விட்டா?"

"ஆமாம், அவனைத் திருச்சிக்கு மாற்றி விட்டார்கள்! உனக்குச் சந்தோஷம் தானே?" என்றான் நண்பன்.

"எனக்குச் சந்தோஷமா? ஆமாம் என்றுதான் வைத்துக் கொள்ளுங்க

ளேன்!" என்று சொல்லி விட்டு உள்ளே போய்விட்டாள்.

நாங்கள் இருவரும் தனியாக வெகு நேரம் பேசாமல் உட்கார்ந்திருந்தோம்.

மீனாட்சி வெகு நாளையப் பழக்கத்தில் என்னையும் தன் குடும்பத்தில் ஒருவனாகச் சேர்த்துக்கொண்டு விட்டாள். அவள் உள்ளத்தில், அவனுடைய புருஷன் குழந்தைகளுடன், எனக்கும் ஒரு இடம் கொடுத்து விட்டாள். இப்பொழுது நான் திடீரென்று வெளியூர் போகிறேன் என்று கேட்டதும் தன் குடும்பம் உடைவதுபோல அவள் எண்ணினாள். அவள் உள்ளத்தில் வேதனை உண்டாயிற்று.

இரவு எனக்கும் என் மனைவிக்கும் அங்கே பலத்த விருந்து. பழைய நாள் நினைவுகளை ஒவ்வொன்றாக எடுத்து விஸ்தரித்துக் கொண்டு வெகு நேரம் பேசினோம்.

ஊருக்குப் புறப்படுமுன் மீனாட்சி என் மனைவியிடம் "ஸரஸ்வதி, நான் என்னமோ உன்னிடம் இப்படிச் சொல்லுகிறேனே என்று நினைக்காதே! எனக்கு வயது வந்த நாள் முதல் பழகின தோஷம் சொல்லுகிறேன். அவர் ஊரை விட்டுப் போவது என் மச்சினர் வீட்டை விட்டுப் போவதுபோல் இருக்கிறது. இத்தனை நாட்களில் உனக்கே தெரிந்திருக்கும்—அவர் உடம்பைக் கவனித்துக் கொள்ளவே மாட்டார். நீ பார்த்துக் கொள்! தலைவலி வந்தால் காபியா ஆஸ்பிரின் சாப்பிட விடாதே! வீட்டு விஷயங்களை நீயே பார்த்துக் கொள். அவரால் முடியாது!" என்றாளாம்.

என் மனைவி ரயிலில் இதை என்னிடம் சொல்லி விட்டு, "என்ன பைத்தியம்! யாரோ அகமுடையான் சிநேகிதன் ஊருக்குப் போனால் அப்படித்தான் அழுவாளோ ஒருத்தி!" என்றாள்.

நான் தலையைத் திருப்பிக்கொண்டு ஜன்னலுக்கு வெளியே பார்த்தேன்.

"இந்தாருங்கள், உங்களுக்குப் பிடிக்குமென்று மீனாட்சி வறுத்துக் கொடுத்தாள்!" என்று என் மனைவி ஒரு காகிதத்தில் வறுத்த கடலை, பயறு, காராமணி, கொள்ளு கலந்திருந்ததைக் கொடுத்தாள்.

"மன்னி, நீ பைத்தியந்தான்!" என்று சொல்லிக் கொண்டேன்.

Regd. No. M. 4392



Edited, Printed and Published by R. Krishnamurthy, at the "Kalki" Press.
*116-119,* Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras